# வாழ்க்கைவழி

நாவல்

ஸ்ரீ. R. கோவிந்தராஜன் அவர்கள்
மனத்திற்கு என்னால் அளிக்கப்பட்டது

6-2-52



'முத்தமிழ்க் கலா வித்துவரத்தினம்'
அமரர் அவ்வை சண்முகம் அவர்கள் நினைவாக
மதுரை காமராஜ் பல்கலைக் கழகத்துக்கு
அன்புடன் அளிக்கப்பட்டது.

27-1-1979

சரத் சந்திரரின் இதர நூல்கள்

அ. கி. ஜயராமன்

மொழிபெயர்த்தது



| | | | | |
|---|---|---|---|---|
| உஷா | ரூ. | 1 | 8 | 0 |
| ஸந்தியா | | 1 | 8 | 0 |
| சைலஜா | | 1 | 8 | 0 |
| ஞானதா | | 1 | 8 | 0 |
| உடைந்த உள்ளம் | | 2 | 12 | 0 |
| பாரதி | | 6 | 0 | 0 |

# வாழ்க்கைவழி

## சரத் சந்திரர்



தமிழில் தருபவர்

அ. கி. ஜயராமன்



ஜோதி நிலையம்

திருவல்லிக்கேணி :: சென்னை.




# வாழ்க்கை வழி

## 1

நள்ளிரவு வெளியே காற்றும் மழையும் ஹோ வென்று அசுர வேகத்தில் அடித்துக்கொண்டிருந்தது. கதவைத் திறந்து வெளியே எட்டிப் பார்க்கக் கூடமுடியாதபடி எங்கும் பயங்கரமான இருள் சூழ்ந்திருந்தது.

மத்திய வகுப்புக் குடும்பங்களில் முக்கியமானவர்கள் யாராவது இறந்துபோனால், அவர்கள் தங்கள் வீட்டிலிருப்பவர்களையும் கிட்டத்தட்ட இறந்தவர்களாக ஆக்கிவிட்டுத்தான் செல்கிறார்கள். சுலோசனாவின் கணவன், இதே மாதிரிதான் செய்துவிட்டுப் போனான். ஒரு வருஷம் ஒன்றரை வருஷம் நோயின் உபத்திரவங்களைப் பொறுத்துக் கொண்டிருந்து விட்டு, மழைக்காலத்தில் ஒரு நாள் இரவு அவன் இறந்து போனான். நிலைமையை உணர்ந்த சுலோசனா முதல்நாள் தன் கணவனுக்குக் கடைசிப் பிராயச்சித்தம் செய்வித்து, அவன் அருகில் சென்று உட்கார்ந்தவள் பிறகு எழுந்திருக்கவே இல்லை. கணவன் எப்படிப் பேசாமல் உயிரை விட்டானோ, அதே மாதிரி அவளும் மௌனமாகப் பேசாமல் உட்கார்ந்திருந்தாள். அழுது அடித்துக் கொண்டு தெருவை ஒன்று கூட்டவில்லை.

பதிமூன்று வயதுள்ள அவள் மகள் ஹேமா சற்று நேரத்திற்கு முன்புதான் பாயை விரித்துக் கொண்டு அருகே படுத்துத் தூங்கிக் கொண்டிருந் தாள். அவளையும் சுலோசனு எழுப்பவில்லை. அவள் நன்ருகத் தூங்கிக் கொண்டிருந்தாள். தந்தை இறந்தது அவளுக்குத் தெரியாது. வீட்டில் வேலைக்காரனே வேலைக்காரியோ இல்லை. கிராமத் திலுள்ளவர்கள் யாவரும் குடியானவர்கள். எட்டின பந்துக்கள் என்று சொல்லக்கூடிவர் கூட யாரும் அருகில் இல்லை. தெருவிலிருந்தவர்களும் வீட்டில் அடைபட்டுக் கிடந்தார்கள். அன்று மாலை முதல், மழை வேறு இடைவிடாமல் பெய்துகொண் டிருந்தது, 'தூக்கம் வரவில்லை' என்று வருகிற வர்கள் கூட வரவில்லை.

வெளியே பெருமழை கொட்டிக் கொண்டிருந் தது. உள்ளே சுலோசனு இறந்த தன் கணவனின் சடலத்தை கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். பொழுது விடிந்ததும் சமா சாரத்தைக் கேள்விப்பட்டு எல்லோரும் வந்தார்கள். பிரேதத்தை மயானத்திற்கு எடுத்துச் சென்ருர் கள். வந்திருந்த ஸ்திரீகள் வீட்டில் சாணத்தைக் கரைத்துத் தெளித்து விட்டு, சுலோசனுவுடன் ஒரு குரல் அழுதுவிட்டுப் போனுர்கள்.

சுலோசனுவுக்குச் சொத்து என்று பெயருக்கு இரண்டு மூன்று மாமரங்கள் உள்ள தோட்டம் ஒன்று தான் இருந்தது. விதவையான அவள் தெருவிலிருந் தவர்களின் உதவியைக் கொண்டு அதை நூறு ரூபாய்க்கு விற்றுத் தன் கணவனுக்குச் செய்யவேண்டிய ஈமக்கிரியைகளைச் செய்து முடித் தாள். கையிலிருந்த காசுபணம் தீர்ந்துவிட்டது.

இந்த நிலைமையில் ஒரு நாள் ஹேமா தன் தாயிடம் "இனி என்ன அம்மா செய்வது?' என்று கேட்டாள்.

"பயமென்னடி கண்ணு? பகவான் இருக்கிறார்!" என்றாள் தாய்.

காரியங்கள் ஆன பிறகு கையில் கொஞ்ச நஞ்சம் மீதமிருந்ததை வைத்துக்கொண்டு ஒரு மாதம் தள்ளினார்கள். மேற்கொண்டு வழி ஒன்றும் இல்லாததால் ஒரு நாள் அதிகாலையில் தன் வீட்டைச் சாத்திப் பூட்டிக் கொண்டு மகளையும் கையில் பிடித்துக்கொண்டு வெளியே புறப்பட்டு வந்து நின்றாள் சுலோசனா.

"எங்கே அம்மா போவது?" என்று கேட்டாள் ஹேமா.

"கல்கத்தாவுக்கு. உன் சகோதரன் வீட்டுக்கு" என்றாள் சுலோசனா.

"என் சகோதரன் யார்? அப்படி ஒருவன் இருக்கிறானென்று நீ சொன்னதே இல்லையே!" என்றாள் ஹேமா.

தாய் சற்றுத் தயங்கி, "நான் இது வரை அவனை மறந்திருந்தேன் அம்மா!" என்றாள்.

ஹேமா மிகுந்த புத்திசாலிப் பெண். அவள் சற்றுத் தயங்கி நின்றாள், பிறகு "வேண்டாம் அம்மா! நாம் பிறர் வீட்டுக்குச் செல்ல வேண்டிய அவசியமில்லை. நம் வீட்டிலேயே இருந்து ஏதோ கஷ்டப்பட்டு உழைத்து அரை வயிற்றுக் கஞ்சி குடிப்போம். அதுதான் நல்லது. பிறர் வீடு செல்வது சரியல்ல, அம்மா! நான் வீட்டை விட்டு வரமாட்டேன்" என்றாள்.

சுலோசனை சற்று வருத்தத்துடன், "நிற்காதே ஹேமா, வெய்யிலாகிவிடும் நட!" என்று சொல்லி மேலே நடந்து கொண்டே "உன்னை அவர் சிரமப் பட்டு இவ்வளவு தூரம் படிக்க வைத்திருக்கிறார். அவைகளெல்லாவற்றையும் வீணாக்காதே. நீ என்ன சொன்னாலும் சரி, ஹேமா நான் ஒன்று சொல் வேன் : வீட்டில் இருந்து தாயும்மகளும் எப்படியோ வயிற்றைக் கழுவி விடலாம்; ஆனால் உனக்கு கல் யாணம் செய்து வைப்பது எப்படி?" என்றாள்.

"எனக்குக் கல்யாணம் வேண்டாம் அம்மா" என்றாள் ஹேமா.

"ஜாதி சமூகத்தார் என்ன சொல்வார்கள்? நம்மை ஜாதியை விட்டுத்தள்ளிவிட மாட்டார் களா?" என்றாள் சுலோசனை.

"ஜாதியும் சமூகமும் என்ன செய்யக் கிடக் கிறது? தாயும் மகளுமாக நாம் கஷ்டப்பட்டு உழைத்துச் சாப்பிடப் போகிறோம். அந்த ஜாதி இருந்தாலென்ன? இல்லா விட்டால் நமக்கு என்ன? உலகத்தில் இன்னும் எத்தனையோ ஜாதிகள் இருக் கின்றன. பெண்களுக்குக் கல்யாணம் செய்யாத தனால் அவர்கள் ஜாதி ஒன்றும் போய்விடுவதில்லை. நாமும் அவர்களைப் போல் இருப்போமே" என்றாள் ஹேமா.

மகளின் வார்த்தைகளைக் கேட்டு இவ்வளவு துக்கத்திலும் சுலோசனைவுக்குச் சிரிப்பு வந்து விட்டது. "அந்த நிலைமையிலும் நாம் கிராமத்தி லிருந்து வெளியேறத்தான் வேண்டும். ஜாதி போன பிறகு யாரும் நம்மைத் தங்கள் வீடு கூடக்கூட வைத்துக் கொள்ள மாட்டார்கள்" என்றாள்.

ஹேமா வேறொன்றும் பதில் பேசவில்லை. அவள் மனத்தில் ஏதேதோ துன்பம் நிறைந்த எண்ணங்கள் எழுந்தன. அவை எல்லா வற்றையும் ஒருவாறு சகித்துக்கொண்டு பேசாமல் தாயுடன் நடக்கலானாள்.

கிராமத்திற்கு உள்ளேயும் கிராமங்களின் ஓரமாகவும் செல்லும் பாதை வழியாக நடந்து ஸ்ரீராம்பூர் ரெயில்வே ஸ்டேஷன் செல்லும் பாதையில் இரண்டு மைல்தூரம் வந்தார்கள். எதிரே சித்தேசுவரியின் ஆலயம் தென்பட்டது. இருவரும் கோயிலுக்குச் சென்று பக்தியோடு தேவியைத் தரிசித்து வணங்கி வெளியே வந்தனர்.

“அம்மா, நாழிகையாகி விட்டது. எனக்கு இந்தமாதிரி பகலில் நடப்பது வெட்கமாக இருக்கிறது” என்றாள் ஹேமா.

சுலோசனாவுக்கும் இந்தமாதிரி வழி நடந்து வழக்கமில்லை. அவளுக்கும் லஜ்ஜையாகத் தான் இருந்தது. எவளோ ஒரு கிழவி கங்கா ஸ்நானம் செய்யச் சென்று கொண்டிருந்தாள். அவளிடம் “அம்மா’ ஸ்ரீராம்பூர் ஸ்டேஷனுக்கு இந்த வழியாகத்தானே போகவேண்டும்?” என்று கேட்டாள் சுலோசனா.

கிழவி சற்று நேரம் இவர்களைக்கூர்ந்து பார்த்து விட்டு, “நீங்கள் எங்கிருந்தம்மா வருகிறீர்கள்?” என்று கேட்டாள்.

சுலோசனா அவள் கேள்விக்குப் பதில் சொல்லாமல் மறுபடியும், “ஏன் அம்மா ஸ்டேஷனுக்குப்போக வேறு வழி ஒன்றும் இல்லையா?” என்று கேட்டாள்.

"கோயிலுக்கு எதிரே ஒரு சந்து இருக்கிறது. அது நேரே ரெயில்வே லயன்வரை போகிறது" என்று கிழவி அந்தச் சந்தைச் சுட்டிக் காட்டி, இந்தச் சந்து பிராமணர் வீடுகளுக் கெதிர்ப் புறமாக ரெயில்வே லயன்வரை போகிறது. இதோடு சென்று, ரெயில் லயனுக்கு இடது புறமாகத் திரும்பினல், நேரே ஸ்டேஷனுக்குப் போய்விட லாம். போ அம்மா! ஒன்றும் பயமில்லே. யாரும் ஒன்றும் சொல்ல மாட்டார்கள்" என்றாள்.

சுலோசன தாமதம் செய்யாமல் மகளின் கையைப் பிடித்துக்கொண்டு அந்தச் சந்தின் வழியே நடக்கலானள்.

## 2

கல்கத்தா நகரில் ஆம்ஹர்ஸ்ட் வீதியில் தான் குணேந்திரனுடைய விசாலமான வீடு இருந்தது. அதுவும் அநேகமாகக் காலியாகத்தான் கிடந்தது. இரண்டாவது மாடியில் உள்ள ஓர் அறையை அவன் படுத்துக் கொள்வதற்கும் மற்றொன்றைப் படிக்கவும் எழுதவும் உபயோகித்து வந்தான். மற்றபடி கீழே, மேலே, இரண்டு இடங்களிலுமுள்ள அறைகள் காலியாகவே கிடந்தன. கீழே ஓர் அறையில் சமையல் செய்பவர்களும், மற்றொன்றில் வேலைக்காரர்களும் வசித்து வந்தார்கள்.

குணேந்திரனின் தந்தை இரும்பு வியாபாரம் செய்து வந்தார். அவர் காலஞ்சென்ற போது விட்டுச் சென்ற செல்வம் அவருடைய ஒரு பிள்ளையல்ல, இன்னும் பத்துப் பிள்ளைகள் இருந்தால் கூட யாரும் வியாபாரம் செய்து கஷ்டப்பட வேண்டிய அவசியமில்லை. சுகமாகச் சாப்பிடலாம்.

அவர் வைத்துவிட்டுப்போன ரூபாய்களோடு தந்தையினுடைய இரும்புத்தொழில் யாவற்றையும் விற்று வந்த ரூபாய்களையும் பாங்கியில் போட்டு விட்டு, குணேந்திரன் கவலையற்று வக்கீல் தொழில் நடத்திவந்தான்.

அப்பொழுது காலை பத்து மணி இருக்கும். அவன் ஏதோ புத்தகத்தைப் படித்துக்கொண்

டிருந்தான். வேலைக்காரன் உள்ளே வந்து "பாபுஜி, ஸ்நானம் செய்ய நேரமாகிவிட்டது" என்றான்.

"வருகிறேன்' என்று சொல்லி மீண்டும் குணேந்திரன் படிக்கலானான்.

வேலைக்காரன் சிறிது நேரம் பொறுத்து மறுபடியும் வந்து, "பாபுஜீ, யாரோ இரண்டு ஸ்திரீகள் வந்திருக்கிறார்கள். தங்களைப் பார்க்க விரும்புகிறார்கள்" என்றான்.

குணேந்திரனுக்கு ஆச்சரியமாகி விட்டது. அவன் புத்தகத்திலிருந்து தன் பார்வையைத் திருப்பி, "என்னையா?" என்று கேட்டான்.

"ஆமாம், பாபுஜீ! தங்களைத்தான் தங்கள்...."

வார்த்தை முடியுமுன் சுலோசனாவே அந்த அறைக்குள் வந்துவிட்டாள். குணேந்திரன் புத்தகத்தை மூடிவிட்டு எழுந்து நின்றான்.

சுலோசனா வேலைக்காரனைப் பார்த்து, " நீ போய் உன் வேலையைக் கவனிக்கலாம்" என்று சொன்னாள். வேலைக்காரன் சென்றதும், "குணேன், உன் அப்பா எங்கே?" என்று கேட்டாள்.

குணேந்திரன் ஆச்சரியத்துடன் அவள் முகத்தைப் பார்த்துக்கொண்டே நின்றான். அவனால் பதில் சொல்ல முடியவில்லை.

சுலோசனா சிறிது நகைத்துகொண்டே, "முகத்தைப் பார்த்து என்னைத் தெரிந்துகொள்ள முடியாது, அப்பா! பன்னிரண்டு வருஷங்களுக்கு முன் இந்த வீட்டிற்கு அடுத்த வீட்டில் நாங்கள் இருந்தோம். உனக்கு உபநயனம் ஆன வருஷத்தில்

தான் நாங்கள் எங்கள் ஊருக்குச் சென்றோம். உன் தந்தை எங்கே? கடைக்குச் சென்றிருக்கிறாரா ?" என்று கேட்டாள்.

"தந்தை இறந்து மூன்று வருஷங்களாகி விட்டன" என்றான் குணேந்திரன்.

"அடடா! அவர் இறந்துவிட்டாரா? உன் அத்தை?"

"அவளும் இல்லை. அப்பாவுக்கு முன்னமேயே சென்றுவிட்டாள்."

சுலோசனா ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டு, "உம். நான் ஒருத்திதான் பாக்கி! மற்றவர்கள் எல்லோரும் சென்று விட்டார்கள். குணேந்திரா, உன் தாய் இறந்தபிறகு உனக்கு உபநயனம் ஆகும்வரை நான்தான் உன்னை வளர்த்தேன். ஏன் குணேன்! நீ உன் சித்தியை மறந்து விட்டாயா?" என்று கேட்டாள்.

குணேந்திரன் அந்தக் கணமே பூமியில் சிரம் வைத்துச் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தான், அவளுடைய பாத தூளியைச் சிரமேற் தரித்துக் கொண்டு, "சித்தி, நீதானா அது?" என்றான்.

சுலோசனா தன் கைகளை நீட்டி அவன் கன்னங்களைத் தொட்டுத் தன் கையை முத்தமிட்டுக் கொண்டு, "ஆமாம் அப்பா, நான்தான் உன்னுடைய அந்தச் சிறிய தாயார்" என்றாள்.

குணேந்திரன் சட்டென்று ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டு, "உட்காரு சித்தி" என்றான்,

சுலோசனா புன்சிரிப்புடன், "உன்னிடம் அடைக்கல மென்று வந்திருக்கும் பொழுது இனி

உட்காராமல் என்ன? கட்டாயம் உட்காருகிறேன். ஏண்டா அப்பா, நீ இன்னும் கல்யாணம் செய்து கொள்ள வில்லையா ?" என்று கேட்டாள்.

இந்தத் தடவை குணேந்திரன் சிரித்து விட்டான். பிறகு, "அதற்கு இன்னும் சமயம் வர வில்லையே?" என்றான்.

"இனி வந்துவிடும். வீட்டில் பெண்டுகள் ஒருவரு மில்லையா ?" என்று கேட்டாள் சுலோசனை.

"இல்லை."

"சமையல் யார் செய்கிறார்கள் ?"

"சமையற்காரர்கள்."

"இனி சமையற்காரர்களுக்கு அவசியமில்லை. நானே சமையல் செய்கிறேன். சரி, இதெல்லாம் பிறகு ஆகட்டும். எனக்கு இன்னும் இரண்டொரு வார்த்தைகள் சொல்ல வேண்டியிருக்கிறது; சொல்லி விடுகிறேன். ஹேமாவின் தந்தைக்கு, இங்கே வேலை போனதும், நாங்கள் எங்கள் ஊருக்குச் சென்றோம். கையில் கொஞ்சம் ரூபாய் இருந்தது. ஊரில் கொஞ்சம் சொத்தும் இருந்தது. அவைகளைக் கொண்டு கஷ்டமில்லாமல் ஏதோ கால க்ஷேபம் நடந்து வந்தது. சென்ற வருஷம் அவர் நோய்வாய்ப் பட்டார். வைத்தியம் செய்தும், நல்ல காற்றுக்காக மலைவாசம் செய்தும், கையில் கொஞ்ச நஞ்சம் மிச்சமிருந்ததும் தீர்ந்து விட்டது. கடைசியில் அவரைப் பிழைக்க வைக்கவும் முடிய வில்லை. ஒருமாத மாயிற்று. அவர் காலமும் ஆய் விட்டது. இனி நீதான் கதி. உன்னைத்தான் நம்பி இருக்கிறேன் அப்பா! வயிற்றுக்குச் சோறு நீதான் போடவேண்டும். இவ்வளவுதான். இதுதான் என்

பிரார்த்தனை" என்று தன் கதையைச் சொல்லி முடித்தாள் சுலோசனா. அவள் கண்களினின்றும் கண்ணீர் பெருகி பொட்டுப் பொட்டாக வழிந்தது.

குணேந்திரன் கண்களும் கலங்கிவிட்டன. அவன் அன்பு கனியும் குரலில், "அம்மா! மகன் தாய்க்குச் சாதம்கூடப்போடமாட்டானா? சித்தி, அப்படி நினைத்துக்கொண்டா நீ இங்கு வந்தாய்?" என்றான்.

சுலோசனா தலைப்பினால் கண்களைத் துடைத்துக் கொண்டு, "இல்லை குணேன்! அந்த மாதிரி நான் நினைத்திருந்தால் இவ்வளவு துக்கத்தில் இத்தனை தூரம் வந்திருக்கவே மாட்டேன். நீ சிறுவனாக இருக்கும் பொழுது உன்னை விட்டுச் சென்றேன். பன்னிரண்டு வருஷங்கள் கழித்துக் கஷ்ட காலத்தில் உன் நினைவு வந்ததும் சற்றும் சங்கோசமில்லாமல் உன்னிடம் வந்தேன. இதைத் தவிர இன்னொரு விஷயமும் இருக்கிறது. என் பெண் ஹேமநளினியும் இருக்கிறாள். அவளை உன் தங்கை என்று எண்ணிக்கொள். என்னைவிட அனாதையாக இருக்கிறாள். கல்யாணம் செய்து கொடுக்க வயசு வந்து விட்டது. இன்னும் அவள் கையில் ஒரு மஞ்சள் கயிற்றைக் கட்ட முடியவில்லை. அவளுக்காகவும் நீ தான் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும்" என்றாள்.

"அம்மா, நீ ஏன் அவளைக் கூட அழைத்துக் கொண்டு வரவில்லை?" என்று கேட்டான் குணேந்திரன்.

"அவளையும் அழைத்துக்கொண்டு தான் அப்பா வந்திருக்கிறேன். அவள் ரொம்ப வெட்கப் படுகிறவள். ரோஷக்காரி. இவைகளை எல்லாம்

அவள் கேட்டுக்கொண்டிருக்க வேண்டாம் என்று அவளைக் கீழேயே விட்டுவிட்டு, நான் மாத்திரம் மேலே வந்தேன்" என்றாள் சுலோசனா.

குணேந்திரன் சற்று வருத்தமடைந்தவனாய், வேலைக்காரனை அழைத்து, "நந்தா, கீழே ஹேமா உட்கார்ந்திருக்கிறாள். போய் அவளைச் சீக்கிரம் மேலே அழைத்துக்கொண்டு வா" என்று உத்தர விட்டான்.

இதற்குள் சுலோசனா, சொன்னாள்:—குணேன் எப்படியாவது இதைச் செய்துவிடு அப்பா, அதனால் ஏற்படும் செலவை — என்-கடனை..." என்றாள்.

இதற்குள் குணேந்திரன் இடை மறித்து, "அம்மா, இந்த மாதிரி எல்லாம் சொன்னால் நான் எழுந்து வெளியே சென்றுவிடுவேன். பிறகு நீ உன் இஷ்டப்படி வாயில் வந்தபடி பேசிக்கொள். என் தாய் இறந்த பிறகு நீ என்னை எடுத்து வளர்த்து இவ்வளவு பெரியவனாக்கினாய். அந்தக் கடனைப்பற்றி எல்லாம் நான் பேச ஆரம்பித்தால் நீயே வெட்கத்தால் எழுந்து வெளியே ஓடும்படி ஆகிவிடும். நான் சொல்லிவிடுகிறேன். ஆமாம்! இனி அந்தப் பேச்சை எடுக்காமல் இருப்பதே நல்லது. நீ பேசாமல் இரு. நானும் ஒன்றும் சொல்லமாட்டேன்" என்றான்.

சுலோசனா சிரித்துக்கொண்டே, "சரி, நல்லது! விட்டுவிடு அந்தப் பேச்சை. உம்! அதோ ஹேமா வருகிறாள். அவளெதிரில் சொல்ல முடியாது. இன் னொரு விஷயம்; அதையும் சொல்லி விடுகிறேன். நான் தாய் என்பதற்காகச் சொல்கிறேன் என்று எண்ணாதே. ஹேமா வருகிறாள். நீயே பார். உன்

தங்கை, குணம், அழகு, சுபாவம் இவைகளில் எப்படிப்பட்ட வரனுக்கும் தகுந்தவளாகவே அவள் இருப்பாள் என்பதை நீ மறுக்கமாட்டாய்.

"அவள் தந்தை அவளைப் போதுமான அளவு படிக்க வைத்திருக்கிறார். கடைசிக் காலத்தில் அவர் இந்த வேலையைத் தவிர வேறொன்றையுமே கவனிக்கவில்லை. நான் சொல்லுகிறேன்; ஹேமா எந்த வீட்டிற்குச் செல்கிறாளோ அந்த வீடு பிரகாசமாகும்படிச் செய்வாள். அடி ஹேமா! வா, இப்படி வா, இதோ பார் உன் அண்ணா குணேந்திரன்! இவனுக்கு நமஸ்காரம் பண்ணு!" என்றாள்.

ஹேமா அறைக்குள் வந்து மண்டியிட்டு நமஸ்காரம் செய்துவிட்டுத் தலை குனிந்து நின்றுகொண்டிருந்தாள். பிரயாண சிரமத்தினால் ஏற்பட்ட களைப்பு நிறைந்த அவளுடைய முகத்தைப் பார்த்த குணேந்திரன் ஒன்றும் தோன்றாமல் நின்றுவிட்டான். சுலோசனா இதை சுட்டிக் காட்டுவது போன்ற குறிப்புடன், "குணேன், இந்தச் சமூகக் கட்டுப்பாடு மட்டும் இல்லாவிட்டால் நான் என் ஹேமாவை உன் கையிலேயே ஒப்படைத்து விடுவேன்! நான் இறந்தால் அவள் பத்து நாள் தீட்டுக் காக்க வேண்டும். நீயும் மூன்று நாள் காக்க வேண்டும்; ஆகையால் நியாயப்படி அவள் உன் சகோதரியாகிறாள்" என்றாள்.

குணேந்திரன் தன்னைச் சமாளித்துக்கொண்டு ஹேமாவிடம், "ஹேமா, அம்மா சொன்னதைக் கேட்டுக்கொண்டாயா நீ? நம் இருவருக்கும் ஒரே தாய்தான். தாயின் வீட்டில் நான் எப்படி இருக்கிறேனோ அப்படித்தான் நீயும். வா, உனக்கு

ஸ்நானம் சாப்பாட்டுக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யச் சொல்லுகிறேன்" என்றான்.

சுலோசனு சட்டென்று, "குணேன், என்ன உன் மார்பில் பூணூலைக் காணவில்லையே?" என்று கேட்டாள்.

குணேந்திரன் தன் மார்பைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே, "நான்தான் பிரம்மஸமாஜி யாகிவிட்டேனே அம்மா!" என்றான்.

"பிரம்மஸமாஜியா! சீச்சீ! என்னடா இது? நீ செய்தது சரியல்ல. போனதெல்லாம் போகட்டும். பிராயசித்தம் செய்து கொண்டு பூணூல் போட்டுக் கொண்டுவிடு" என்றாள் சுலோசனு.

"இது அப்பாவே செய்துவிட்டுப் போயிருக்கிறார். நான் செய்யவில்லை அம்மா. தவிர இதற்காகப் பிராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டியது அவசியம் என்று நான் நினைக்கவும் இல்லை. பிரம்ம ஸமாஜம் அப்படி ஒன்றும் தீமையானதல்ல!" என்றான் குணேந்திரன்.

சுலோசனுவுக்கு இது உள்ளுக்குள் சிறிது வருத்தத்தை உண்டாக்கிற்று. அவள் உட்கார்ந்து விட்டாள். சிறிதுநேரம் பொறுத்து ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டு, "ஏனோ தெரியவில்லை? இந்தப் பையன்களுக்கு ஏன் இந்த மாதிரி விபரீத புத்தி எல்லாம் தோன்றுகிறதோ?" என்றாள்.

குணேந்திரன் சிரித்துக்கொண்டே, "விபரீத புத்தியைப்பற்றிப் பிறகு விவாதிக்கலாம், அம்மா! நீ இப்பொழுது சமையல் வேலையைச் சற்று கவனி" என்றான்.

சுலோசனு எழுந்து சென்றாள்.

# 3

வழிப்போக்கர்கள் மரத்தடியில் சமையல் செய்து சாப்பிட்டுவிட்டு, சமையல் செய்த மண் பாத்திரத்தை அங்கேயே எறிந்து விட்டுப் போகிறார்கள். அது உடைந்ததா உடையவில்லையா என்பதைக்கூடத் திரும்பிப் பார்ப்பதில்லை. அதே மாதிரிதான் இந்தப் பத்தொன்பதாம் நூற்றாண்டு ஜனங்களும் சரஸ்வதியிடம் தங்கள் காரியம் ஆன பிறகு, லக்ஷ்மியின் ராஜமார்க்கத்தில் செல்லும் போது சரஸ்வதியை உதறித் தள்ளி விடுகின்றனர், அவள் உயிருடன் இருக்கிறாளா செத்தாளா என்றுகூடத் திரும்பிப் பார்ப்பதில்லை. ஆனால் குணேந்திரன் அவர்களைப் போன்றவனல்ல. முதல் நூற்றாண்டுக்காரர்கள் கணக்கில்தான் அவனைச் சேர்த்து எண்ண வேண்டும்.

ஆரம்பத்தில் அவன் சரஸ்வதியிடம் எவ்வாறு சிரத்தையும் பக்தியும் வைத்திருந்தானோ அதே மாதிரிதான் வக்கீலான பிறகும் வைத்திருந்தான். அவனுடைய புத்தகசாலை புத்தகங்களால் நிறைந்திருந்தது. ஹேமாவுக்கு அந்தப் புத்தக அறையில்தான் புகல் கிடைத்தது. தன் சாமான்களையெல்லாம் ஒழுங்காக வைக்கும் வழக்கம் குணேந்திரனிடம் கிடையாது. அலமாரியிலிருந்து வெளியே வருகிற புஸ்தகம் தன் இடத்திற்குச் சீக்கிரம் திரும்புவதில்லை. மேஜையிலும். நாற்காலி

யிலும் படுக்கையிலும் கிடந்து கடைசியில் ஒரு நாள் நந்தனின் உதவியால் அலமாரிக்குப் போய்ச் சேரும். பிறகு அவசியம் ஏற்படும்போது. அதைத் தேடி எடுப்பது சுலபமான காரியமாயிராது. அவனிடம் உள்ள புத்தகங்களுக்கு ஜாப்தாகூட ஒன்று இருந்தது. ஆனால் அதை உபயோகத்திற்குக் கொண்டுவர வழி இல்லை.

ஹேமா இந்த அலங்கோலத்தை நாலைந்து நாட்களிலேயே சீர்ப்படுத்திவிட்டாள். ஒரு நாள் அவள் ஒரு அலமாரியைக் காலி செய்து புத்தகங்களை எல்லாம் கீழே வைத்துக்கொண்டிருந்தாள். அதற்குள் குணேந்திரன் அங்கு வந்தான். அவனைப் பார்த்து, "அண்ணா, இந்தப் புஸ்தகங்களை எல்லாம் அந்த அலமாரியிலும், அங்குள்ளவைகளை இந்த அலமாரியிலும் வைத்தால் ரொம்ப சௌகரியமாக இருக்கும்" என்றாள்.

குணேந்திரன் சிரித்துக்கொண்டே, "என்ன சௌகரியமாகும்?" என்று கேட்டான்.

"சரிதான்! ஏன் சௌகரியமாக இருக்காது? பாரேன், இந்தப் புத்தகங்களை இங்கே வைப்பதால் எப்படி... ..." என்றாள்.

குணேந்திரன் இடை மறித்து, ஆமாம், ஆமாம்! பார்த்துக்கொண்டுதான் இருக்கிறேன். ரொம்பச் சௌகரியமாகத்தான் இருக்கும்" என்றான்.

ஹேமா உடனே! கோபித்துக்கொண்டு ஒரு நாற்காலியில் போய் உட்கார்ந்து, "சரி' ஆனால் போ! நான் எடுத்துவைக்க மாட்டேன். நல்லது செய்தால் கூட உனக்குக் கெட்டதாகத்தான் தோன்றுகிறது" என்றாள்.

குணேந்திரன் ஒரு புத்தகத்தை எடுத்துக் கொண்டு சிரித்துக்கொண்டே வெளியே சென்று விட்டான்.

ஹேமா இரவு பகல் அந்த அறையிலேயே வசிக்கலானள். ஆகையால் குணேந்திரன் தன் படுக்கையறையிலேயே படிக்கவும் எழுதவும் ஆரம்பித்தான்.

ஒரு ஞாயிற்றுக்கிழமையன்று மத்தியானம் ஹேமா வெளியே நின்றுகொண்டே, "அண்ணு, உள்ளே வரலாமா?" என்று கேட்டாள்.

குணேந்திரன் உள்ளே இருந்து கொண்டே, "வரலாம்" என்ருன்.

ஹேமா உள்ளே நுழைந்ததும், "எப்பொழுது பார்த்தாலும் இந்தப் படுக்கையறையிலேயே உட்கார்ந்து ஏன் படித்துக்கொண்டிருக்கிருய்?" என்று கேட்டாள்.

"ஏன் அதனல் என்ன? இந்த அறையில் படிப்பு என்ன குறைவாகவா வரும்?" என்ருன் குணேந்திரன்.

"ஏன், லைப்ரெரி அறையில படிப்பதற்கு என்ன தடை வந்தது" என்று கேட்டாள்? ஹேமா.

"தடை ஒன்றும் இல்லை. ஆனல் படிப்பு குறையாகி விடுகிறது. இந்த அறையில் அதை நிறை செய்துகொள்கிறேன்."

ஹேமா முதலில் சிரித்தாள். பிறகு விஷயம் புரிந்தவுடன் சற்றுக் கம்பீரமாக, "உன் காரியம் எல்லாமே இப்படித்தான். எந்தக் காரியத்தையும் நீ நேர் வழியில் செய்வதே இல்லை" என்ருள்.

குணேந்திரன் பதிலொன்றும் சொல்லாமல் சிரிக்கலானன்.

ஹேமா சொன்னுள்:—" ஆனல், எனக்கு எல்லாம் தெரியும். நான் அந்த அறையில் இருப்ப தால்தான் நீ அங்கே வருவதில்லை. நீ என்னிடம் வெட்கப்படுகிருய், நான் உன்னிடம் வெட்கப் படுவதில்லை"

"ஏன் வெட்கப்படுவதில்லை? நீ வெட்கப்பட வேண்டும்" என்றுன் குணேந்திரன்.

ஹேமா எதிரே தொங்கும் திரைச்சீலையைப் பின்னுக்கு அகற்றிப் புன்சிரிப்புடன், "நான் ஏன் உன்னிடம் வெட்கமடைய வேண்டும்? நீ யார் அன்னியனு? அது முடியாது, அண்ணு! நீ அந்த அறைக்குப் போ" என்று சொல்லிக்கொண்டே அவள் புத்தகத்தை எடுத்துக்கொண்டு சென்றுள்.

குணேந்திரன் ஒரு நாள் ஹேமாவுக்காக வளையல்கள், சங்கிலி, வங்கி முதலியவைகள் வாங்கிக்கொண்டு வந்தான்.

சுலோசனு அவற்றையெல்லாம் பார்த்து விட்டு "ஏண்டா குணேன், இதெல்லாம் என்ன ?"என்று கேட்டாள்.

"இது மட்டுமா? இவைகள் எப்படிப் போதும்? இன்னும் நிறைய வாங்கிப் போடவேண்டும். வெறுங் கையுடன் நிற்கும் பெண்ணை யார் அம்மா கல்யாணம் செய்துகொள்வார்கள்?" என்றுன்.

சுலோசனு மேற்கொண்டு ஒன்றும் சொல்ல வில்லை. ஆனல் அவள் மனம் உள்ளுக்குள் சற்றுப் பயமும் சங்கையும் கொண்டது. இவ்வளவு

சீக்கிரத்தில் எப்படி இருவரும் ஒருவரை ஒருவர் நேசிக்கலானார்கள் என்பதையே யோசிக்கலானாள்.

ஒரு நாள் அவள் குணேந்திரனை அழைத்து, "அடுத்த மார்கழி மாதம் ஹேமாவுக்குக் கல்யாணம் செய்துவிட வேண்டியதுதான். குணேன், எப்படிச் செய்வாயோ எனக்குத் தெரியாது. கல்யாணம் செய்தே ஆகவேண்டும். பெண்ணுக்கு வயசாகி விட்டது" என்றாள்.

"இதற்காக நீ கவலைப்படாதே, அம்மா! நிச்சிந்தையாக இரு. நல்ல வரனைப் பார்க்க வேண்டும். கையைக் காலைக் கட்டிக் கிணற்றில் தள்ளிவிட முடியாது" என்றான் குணேந்திரன்.

சுலோசனா ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டு, "நல்லது கெட்டது அவளுடைய அதிருஷ்டத்தைப் பொறுத்திருக்கிறது. நமது கடமையை நாம் செய்வோம். பிறகு கடவுள் இருக்கிறார்" என்றாள்.

"அது சரி" என்று சொல்லிவிட்டு அவன் சென்றான். அவள் கண் முன்னின்றும் ஒரு கறுப்பு நிழல் அகன்றது. சுலோசனா அதைப் பார்த்து விட்டு ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டு தன் காரியத்தைப் பார்க்கச் சென்றாள். ஆனால், மன திற்குள், "இல்லை, இது சரியல்ல! எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் ஹேமாவுக்குக் கல்யாணம் செய்து விடுவது தான் சரி;" என்று சொல்லிகொண்டாள்.

சில நாட்களுக்குப் பிறகு ஹேமா ஒரு நாள் குணேந்திரனின் அறைக்குள் நுழைந்து, "இன்னும் படுத்துக் கொண்டேதான் இருக்கிறாயா? வேறு

ஆடை அணிந்து கொள்ள வில்லையா? போக வேண்டாமா? சீக்கிரம் புறப்படு" என்றாள்.

குணேந்திரன் பேசாமல் படுக்கையில் படுத்த வாறு ஹேமாவின் பக்கம் பார்த்துக்கொண் டிருந்தான். அவள் அலமாரி யருகில் சென்று சட்டென்று அதைத் திறந்து கைநிறைய நோட் டையும் ரூபாயையும் எடுத்துத் தன் தலைப்பில் முடிந்துகொண்டாள். பிறகு கதவைச் சாத்திப் பூட்டிவிட்டு அவனருகில் சென்று, "உன் காலில் வேண்டுமானாலும் விழுகிறேன், அண்ணா. தாமதம் செய்யாதே. எழுந்திரேன்! கடை சாத்திவிடு வார்கள்" என்றாள்:

குணேந்திரன் அவளுடைய அலங்காரத்தைப் பார்த்து காரணத்தை ஒருவாறு புரிந்து கொண் டான் ஆயினும், "எங்கே போகவேண்டும்?" என்று கேட்டான்.

ஹேமா சற்று வருத்தத்துடன், "சரியாப் போச்சு! வண்டி கொண்டுவரச் சொல்லி ஒரு மணி நேரமாகிறது. இப்பொழுதுதான் நீ எங்கே போகவேண்டும் என்று கேட்கிறாயாக்கும்!" என்றாள்.

"அது வண்டிக்காரனுக்குத் தெரியும், எங்கே போக வேண்டுமென்பது. நான் வண்டிக்கார னல்ல, எனக்கு எப்படித்தெரியும்?" என்றான் குணேந்திரன்.

ஹேமா சிரித்துக்கொண்டே, "நீ ஏன் அண்ணா வண்டிக்காரனாகவேண்டும். வா சீக்கிரம்; கடையை மூடிவிடுவார்கள்" என்றாள்.

"எந்தக் கடை?"

"புத்தகக் கடைக்கு. மாந்தா உன்னிடம் சொல்ல வில்லையா? நான் அவளிடம் சொல்லியிருந்தேனே. இப்பொழுது புதிதாகச் சில புத்தகங்கள் வெளி வந்திருக்கின்றன. நான் ஒரு 'லிஸ்ட்' தயாரித்திருக்கிறேன்" என்ருள் ஹேமா.

அவள் கையிலிருந்த காகிதத் துண்டைப் பார்த்து, குணேந்திரன் கையை நீட்டி, "எங்கே பார்க்கலாம், உன் லிஸ்டை" என்ருன்.

"இல்லை, லிஸ்டைப் பார்த்தால் நீ வாங்கவிட மாட்டாய்."

"ஆனல் தெரியாமல் வாங்கிக் கொண்டு வந்தாலும் படிக்க விடமாட்டேன்."

ஹேமா சிறிது நேரம் மௌனமாக இருந்து விட்டு, "சரி, வா, வண்டியில் போகும்போது காட்டுகிறேன்" என்ருள்.

* * *

இருவரும் புஸ்தகம் வாங்கிக்கொண்டு சாயங்காலம் வண்டியில் வீடு திரும்பினர். சுலோசன அதைப் பார்த்துவிட்டு, "இவ்வளவு புஸ்தகமும் ஏதுக்கப்பா?" என்று கேட்டாள்.

"தெரியாது அம்மா! இவைகள் எல்லாம் ஹேமாவின் புஸ்தகங்கள். வியர்த்தம் அண்டுஸன்ஸிலிருந்து இந்த புஸ்தகங்களை வாங்கி ருபாயை நாசமாக்கி விட்டு வந்திருக்கிருள்" என்ருன் குணேந்திரன்.

"நீ ஏன் கொடுத்தாய்?" என்று கேட்டாள் சுலோசன.

"நான் கொடுப்பதென்ன? சாவி அவளிடந்தானே இருக்கிறது? அவளே எடுத்துக்கொள்



டாள். வண்டி கொண்டுவர உத்தரவிட்டாள். அவளே போய் வாங்கி வந்தாள். நான் சும்மா கூடச் சென்றேன். அவ்வளவுதான் " என்றான் குணேந்திரன்.

ஹேமா சில புஸ்தகங்களை நந்தாவிடம் கொடுத்து மேலே அனுப்பினாள். பிறகு தானே சில புஸ்தகங்களை எடுத்துக் கொண்டு சென்றாள்.

சுலோசனா குணேந்திரனிடம், " குணேன், இந்த மாதிரி அவளுக்கு இடம் கொடுப்பது சற்றும் சரியல்ல. நாளைக்கு எங்கே, யார் கையில் அவளை ஒப்பிக்க வேண்டுமோ? அங்கே போய் மிகக் கஷ்டப்படுவாள்," என்றாள்.

குணேந்திரன் புத்தகசாலை உள்ள அறைக்குச் சென்றான். ஹேமா விளக்கருகில் உட்கார்ந்து, வாங்கிக்கொண்டு வந்த புத்தங்களுக்கு வரிசையாக நம்பர் சீட்டு ஒட்டிக் கொண்டிருந்தாள்.

"உனக்கு இந்த மாதிரி இடம் கொடுப்பது சரியல்ல. நாளை கல்யாணமாகிப் புக்ககம் சென்றால் கஷ்டப்பட வேண்டி நேரிடும் என்று அம்மா சொல்லுகிறாள் " என்றான் குணேந்திரன்.

ஹேமா முகத்தைத் திருப்பிக் கோபத்துடன், "எதற்காகக் கஷ்டப்படப் போகிறேன்? என்னை ஏழைகள் வீட்டில் கொடுத்தால் நான் மறுநாளே ஓடிவந்து விடுவேன்" என்றாள்.

குணேந்திரன் சிரித்துக்கொண்டே, "சரிதான் நன்றாக இருக்கிறது!" என்றான்.

ஹேமா மேற்கொண்டு ஒன்றும் சொல்லவில்லை. தன் காரியத்தில் கவனமானாள். குணேந்திரன்

சிறிது நேரம் அவளையே பார்த்துக்கொண்டிருந்து விட்டு, பீறிட்டெழுந்த பெருமூச்சை அடக்கிக் கொண்டு தன் அறைக்குச் சென்றான்.

*　　*　　*

துர்க்கா பூஜை முடிந்தது. தசரா அன்று ஹேமா வண்டியில் உட்கார்ந்து தேவியின் மூர்த்தியைத் தண்ணீரில் விஸர்ஜனம் செய்வதைப் பார்க்கப் போயிருந்தாள். வீடு திரும்பிவந்ததும் தாய்க்கு நமஸ்காரம் செய்து மாடிக்குச் சென்றாள். வெளி மாடியில் நிலவில் குணேந்திரன் தனியே உலவிக்கொண்டிருந்தான். ஹேமா அவனெதிரில் சென்று, அவன் பாதங்களைத் தொட்டு நமஸ்காரம் செய்து, பாததூளியை எடுத்துச் சிரமேல் தரித்துக் கொண்டு எழுந்து நின்றாள்.

அவன் ஒன்றும் பேசவில்லை. மௌனமாக அவள் முகத்தையே பார்க்கலானான். இதனால். ஹேமா சிறிது வெட்கமடைந்தாள். ஆயினும் உடனே, "என்ன அண்ணா, எனக்கு ஆசீர்வாதம் செய்யவில்லையா?" என்று கேட்டாள்.

குணேந்திரனின் கனவு கலைந்தது. அவன் சட்டென்று, "ஏன், செய்யாமல் என்ன?" என்றான்.

"எங்கே செய்தாய்?"

"மனத்திற்குள் செய்துவிட்டேன்!"

ஹேமா தனக்கு வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டு, "சரி, என்ன ஆசீர்வாதம் செய்தாய்? என்னிடம் சொல்" என்றாள்.

குணேந்திரனுக்குச் சங்கடமாகிவிட்டது. கடைசியில் அவன் கம்பீரமாக "ஆசீர்வாதத்தை வெளியே சொல்லக்கூடாது. சொன்னால் பலிக்காது" என்றான்.

"சரி, போகட்டும்! நீ அம்மாவுக்கு நமஸ்காரம் செய்தாயா?" என்று கேட்டாள் ஹேமா.

"அதுதான் தினம் செய்துகொண்டிருக்கிறேனே" என்றான் குணேந்திரன்.

ஹேமா சற்று வருத்தத்தோடு, "அது வேறு விஷயம். இன்று தசராவுக்கு நமஸ்காரம் செய்ய வேண்டாமா? சீக்கிரம் போ; இல்லாவிட்டால் அவள் வருத்தப் படுவாள்" என்றாள்.

குணேந்திரன் கீழே இறங்கிச் சென்றான்.

கார்த்திகை மாதம் அநேகமாகப் பாதி கழிந்து விட்டது. ஹேமா ஒருநாள் திடீரென்று குணேந்திரன் அறைக்குள் நுழைந்து, "உங்களுக்குப் பேசுவதற்கு வேறு விஷயமே இல்லையா? இல்லை, வேறு வேலைதான் இல்லையா? கடைசியில் நான் என்ன செய்தேன் உங்களை?" ஏன் என் மண்டையைப் போட்டு உருட்டுகிறீர்கள்?" என்று சொல்லி அழலானாள்.

குணேந்திரன் பிரமித்துப்போய் 'இதென்ன ஹேமா 'விஷயம் என்ன ?" என்று கேட்டான்.

ஹேமா அழுதுகொண்டே, "ஒன்றுமே தெரியாதது போல விஷயம் என்ன என்று கேட்கிறாயா? சாந்திபுரத்திலோ, வேறு எங்கேயோ, எல்லாம் ஏற்பாடாகி விட்டதென்று அம்மா சொல்லுகிறாளே! நான் கல்யாணம் செய்து கொள்ளா விட்டால் நீங்கள் பலவந்தமாக என் கை

கால்களைக் கட்டிக் கிணற்றில் தள்ளி விடுவீர்கள் போல் இருக்கிறதே!” என்றாள்.

குணேந்திரனுக்கு இப்பொழுது விஷயம் விளங்கி விட்டது. அவன் சிரித்துக்கொண்டே; “சரிதான், இதுதானா! உனக்கு வயசாகிவிட்டது. கல்யாணம் செய்து வைக்க வேண்டாமா?” என்று கேட்டான்.

“வேண்டாம்”

“வேண்டாமா? கல்யாணமாகா விட்டால் ஜாதியை விட்டுத் தள்ளிவிடமாட்டார்களா?”

“நீயும்தான் கல்யாணம் செய்துகொள்ள வில்லை. உன்னை ஏன் ஜாதியிலிருந்து தள்ள வில்லை?” என்று கேட்டாள் ஹேமா.

“எங்கள் விஷயம் வேறு. நாங்கள் பிரம்ம ஸமாஜிகள். ஆனால் உங்களில் பெண்களுக்குத் தகுந்த வயசில் மணம் செய்யாவிட்டால் ஜாதி கெட்டுவிடுகிறது. ஆகையால்.........“என்றான்.

ஹேமா கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, “நீங்கள் நல்லவர்கள். உங்கள் சமூகத்தில் மனிதத் தன்மை இருக்கிறது. ஆகையால் நீங்கள் மனிதர்களை இம்மாதிரி வதைப்பதில்லை. நான் இந்த வீட்டை விட்டு ஒருகாலும் போகமாட்டேன். நீங்கள் எவ்வளவு சூழ்ச்சிகள் செய்தாலும் சரி; நான் போகவே மாட்டேன்” என்றாள்.

குணேந்திரன் அவளைச் சமாதானப்படுத்தும் அபிப்பிராயத்துடன் மிக இனிமையாக, “அதுவும் பெரிய வீடுதான். பார்ப்பதற்கு அவர்களும் ரொம்ப நல்லவர்களாகவே தோன்றுகிறார்கள். படித்த

வர்கள், புத்திமான்கள், பெரிய மனிதர்கள் அங்கே உனக்கு யாதொரு கஷ்டமும் இராது" என்றான்.

ஹேமா சற்றும் சமாதானம் அடையவில்லை. "நான் உன்னிடம் சொல்லிவிடுகிறேன், அண்ணு. இது ஒருகாலும் முடியாது. நான் இருப்பது உனக்குப் பாரமாக இருந்தால் நீ எனக்குச் சாப்பாட்டிற்கு ஒன்றும் கொடுக்க வேண்டாம். சோறு தண்ணி இல்லாமலேயே நான் இந்தப் புத்தக அறையிலேயே இருக்கிறேன். உன்னை ஒன்றும் கேட்கவில்லை" என்றாள்.

குணேந்திரன் சிரிக்க முயன்றுகொண்டே, "அங்கேயும் உனக்குப் புத்தக அறை கிடைக்கும். கிடைக்கா விட்டால் உன்னுடைய இந்த அறையை அங்கே கொண்டு வந்து சேர்த்துவிடுகிறேன்."

ஹேமா அவன் வார்த்தையைக் காது கொடுத்துக் கேட்கவில்லை. அழுது கொண்டே, "அதெல்லாம் ஒன்றும் வேண்டாம், அண்ணு! உன் கால்களைப் பிடித்துக்கொள்கிறேன். நீ இந்தச் சம்பந்தத்தை எப்படியாவது நிறுத்தி விடேன்!" என்றாள்.

அவளுடைய அழுகையைப் பார்த்து, குணேந்திரன் கண்களிலும் கண்ணீர் வந்துவிட்டது. அவன் எப்படியோ தன்னைச் சமாளித்துக் கொண்டு, "அது எப்படி முடியும், ஹேமா? முடியாது, எல்லாம் பேசி முடித்தாய்விட்டதே" என்றான்.

"என்ன முடிந்துவிட்டது? நாசமாய் போன பேச்சு! நீ தானே சம்பந்தம் பேசினுய். நீ நினைத்தால் அதை உதறி விடலாம். நான் உன்னைக்

கைகூப்பி நமஸ்கரிக்கிறேன். அண்ணு, என்னுடைய இந்தப் பேச்சைக் கேளேன்!" என்ருள் ஹேமா.

சுலோசனுவுக்குக் கொஞ்சம் சந்தேகம் ஏற்பட்டது. அவள் பின்னுலேயே மேலே வந்தாள். அறைக்குள் வந்து கோபமாக, "இதெல்லாம் என்ன ஹேமா? பைத்தியக் காரிபோல் என்ன பிதற்றுகிருய்? சம்பந்தம் பேசிமுடித்த பிறகு அதை மறுக்க முடியுமா? உன் அதிருஷ்டத்தினுல் தான் இந்த மாதிரி சகோதரன் கிடைத்திருக்கிருன். எவ்வளவு சிறந்த இடம் கிடைத்திருக்கிறது? நீ அதை மறுத்துவிடு என்கிருய். ஹிந்துப் பெண்ணுக இருந்தும், கிறிஸ்தவப் பெண்களைப்போல் கன்னியாகவே இருப்பாயா? போடி, கீழே போ!" என்ருள்.

ஹேமா கீழே சென்ருள். சுலோசனு குணேந்திரனைப் பார்த்து, "இரவு பகல் புத்தகம் படித்துக் கொண்டிருந்ததன் பலன் இது. இருபத்துநாலு மணி நேரமும் நாவலும் நாடகமும் படித்துக் கொண்டிருந்தால் இந்த மாதிரி விபரீத எண்ணங்கள்தான் உண்டாகும். மார்கழி மாதம் எப்படியாவது இந்தக் கல்யாணத்தை முடித்தே ஆகவேண்டும்" என்ருள்.

குணேந்திரன் மௌனமாக உட்கார்ந்திருந்தான். சுலோசனு சிறிது நேரம் நின்றுவிட்டு மெதுவாகக் கீழே இறங்கினுள்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு குணேந்திரன் ஆபீஸிலிருந்து திரும்பி வந்ததும் ஏதோ புத்தகம் எடுப்பதற்காகப் புத்தக அறைக்குள் நுழையும்

போது ஹேமா உள்ளே இருந்து. "அண்ணு, உள்ளே வராதே; நான் சாப்பிட்டுக் கொண் டிருக்கிறேன்" என்ருள்.

குணேந்திரன் ஆச்சரியமடைந்து நின்று விட்டான். பிறகு, "சாப்பிடுகிருயா? நான் உள்ளே வந்தால் என்ன, உன் சாப்பாடு ஊசிப் போய்விடுமா?" என்று கேட்டான்.

"வீடு முழுழுதும் தான் ஒரே அநாசாரமாக இருக்கிறதே" என்ருள் ஹேமா.

"உன் வேலைக்காரி மாந்தா வருகிருள். அப்பொழுது உன் சாப்பாடு கெட்டுப்போவதில்லை, ஜாதி கெட்டு விடுவதில்லை, நான் அவளையும்விடத் தாழ்ந்தவனு?" என்ருன் குணேந்திரன்.

ஹேமா வருத்தத்துடன் நகைத்துவிட்டு, "சரி, ஆனல் வா! நான் சாப்பிட்டுவிட்டேன்" என்று சொல்லித் தட்டை எடுத்து மேஜைக்கடியில் வைத்தாள்.

"இல்லை, இல்லை! நீ சாப்பிடு, சாப்பிடு! நான் உடைகளை மாற்றிக்கொண்டு வருகிறேன்" என்று சொல்லிக்கொண்டே குணேந்திரன் சட் டென்று அவ்விடத்தை விட்டுச் சென்றுவிட்டான். அவன் இதயத்தில் சுரீலென்று ஒரு ஜ்வாலை எழுந்ததைப்போல் இருந்தது.

மறுநாள் காலை பத்து மணிக்குக் குணேந்திரன் சாப்பிட்டுவிட்டு எழுந்தானே இல்லையோ, ஹேமா ஓடிவந்து அவன் தட்டிலேயே சாப்பிட உட்கார்ந் தாள். சமையற்காரனிடம். "எனக்கும் இந்தத் தட்டிலேயே பரிமாறு" என்ருள்.

சமையற்காரன் ஆச்சரியத்துடன், "இப்பொழுதுதான் இதில் பாபுஜீ சாப்பிட்டுவிட்டுப் போனார்" என்றான்.

"ஆமாம், ஆமாம்! தெரியும்; நீ பரிமாறு" என்றாள்.

பக்கத்து அறையில் சுலோசனா உட்கார்ந்திருந்தாள். இதைக்கேட்டு, சட்டென்று அங்கே வந்து, "இதென்ன காரியம் செய்கிறாய்; ஹேமா? இது குணி சாப்பிட்ட எச்சில் தட்டு, எழுந்திரு: வேறு புடைவையை கட்டிக் கொண்டு கங்கா ஜலத்தைத் தெளித்துக்கொள்" என்றாள்.

ஹேமா குணேந்திரன் தட்டிலிருந்து கறித்தான்களை எடுத்துத் தின்றுகொண்டே சமையற்காரனிடம்' "பரிமாறச் சொன்னால் ஏன் தயங்குகிறாய்? அண்ணாவின் எச்சில் தட்டில் சாப்பிட உலகில் யாருக்குப் பாக்கியம் கிடைக்கும்? அதிருஷ்டம் இருக்கவேண்டும்! அப்பொழுதுதான் இந்தத் தட்டில் சாப்பிட முடியும்" என்றாள்.

சுலோசனா வெறுப்புடன் செயலற்றுப் பெண்ணின் முகத்தைப் பார்த்துக் கொண்டு பேசாமல் நின்றாள். சமையற்காரன் சாதம், பருப்பு கறி குழம்பு எல்லாம் கொண்டுவந்து பரிமாறலானான்.

குணேந்திரன் வெளியே தாழ்வாரத்தில் நின்று கையலம்பிக் கொண்டிருந்தான். உள்ளே நடந்த பேச்சுக்கள் யாவும் அவன் செவிகளில் விழுந்தன. சாயங்காலம் அவன் ஹேமாவிடம், "இன்று உன் ஜாதி போய்விட்டது !" என்றான்.

"யார் சொன்னார்கள் உனக்கு?" என்று கேட்டாள் ஹேமா.

"யாராவது சொல்லட்டும்! ஜாதி என்னமோ போய்விட்டது."

ஹேமா தலை நிமிர்ந்து, "அநாவசியம்! உன் தட்டில் சாப்பிட்டதால் ஒருவர் ஜாதியும் போய் விடாது. ஜாதியை உண்டாக்கினார்களே, அவர்கள் ஜாதிகூடப் போகாது" என்றாள்.

குணேந்திரன், பக்கத்திலிருந்த நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்து, "எப்படியாவது இருக்கட்டும், என்ன இருந்தாலும் நீ இந்தக் காரியம் செய்தது சரியல்ல. யார் யாருக்கு எந்தெந்த ஜாதியோ அவர்கள் அதை மதித்து நடக்க வேண்டும். தவிர அம்மாவுக்கும் இதனால் வருத்தம் ஏற்படும் அல்லவா?" என்றான்.

ஹேமா சிறிது நேரம் மௌனமாக இருந்து விட்டு, "நீ எல்லோரையும்விடத் தாழ்ந்தவன்; எல்லோரையும் விடச் சிறியவன் என்பதை நீ வேண்டுமானால் நினைத்துக் கொள். ஆனால் என்னால் அது முடியாது. உன் தட்டில் சாப்பிட்டதனால் அம்மா வருத்தப்படுவாள். ஆனால் அதில் சாப் பிடாவிட்டால் அவளைவிடப் பெரியவர்கள் வருத்தப் படுவார்கள். சரி, நீ போ! இனி எனக்கு நேரமில்லை. நான் படிக்க வேண்டும்" என்று சொல்லிக் கொண்டே திறந்திருந்த புத்தகத்தில் கவனத்தைக் செலுத்தலானாள்.

குணேந்திரன் சிறிது நேரம் பேசாமல் உட் கார்ந்திருந்தான். பிறகு எழுந்து மெதுவாக நடந்தான். அவன் கண்களின் முன்னாலிருந்து ஒரு கறுப்புத்திரை திடீரென்று அன்று அகன்றது.

4

மார்கழி மாதக் கடைசியில் நவத்வீபத்தில் ஒரு பணக்காரக் குடும்பத்தில் ஹேமாவுக்கு விவாகம் நடந்தது. தூரத்திலேயே நின்று அவள் குணேந்திரனுக்கு நமஸ்காரம் செய்துவிட்டு கணவன் வீட்டுக்கு குடித்தனம் செய்யச் சென்ருள். அங்கே அவளுக்கு மாமியார், மாமனர், நாத்தனர் ஒருவரும் இல்லை. வீட்டில் வயசான பாட்டி ஒருத்தி இருந்தாள். விவாகமாகாத மைத்துனன் ஒருவன் கல்கத்தாவில் கலாசாலையில் படித்துக்கொண்டிருந்தான்.

கிசோரி பாபுவுக்கு வயசு கிட்டத்தட்ட முப்பத்தாறு இருக்கும். முதல் மனைவி இறந்த பிறகு அவர் வெகு நாள் வரை வயசான பெண்ணாக வேண்டுமென்று தேடிக் கொண்டிருந்தார். ஆகையால் தான் அவர் ஹேமாவை நேரில் பார்க்காமலேயே மணக்கச் சம்மதித்தார். விவாகம் ஆனதும் சுலோசனவையும் தன் மகளுடனேயே வந்து இருக்கும்படி கடிதம் எழுதினர். சுலோசனவும் சம்மதித்தாள். நவத்வீபத்தில் இருந்துகொண்டு ஏதோ போகும் வழிக்குப் புண்ணியம் சம்பாதித்துக் கொள்ளலாம் என்பதே அவளுடைய அபிப்பிராயம்.

ஆனல் ஹேமா அவளுக்குக் கீழ்க்கண்டவாறு கடிதம் எழுதிவிட்டாள் :—

"நீ இப்பொழுது இருக்கும் வீட்டிலிருந்தே இந்த நவத்வீபத்தையும் உத்தாரணம் செய்ய முடியும். அங்கே இருந்து நீ புண்ணியம் சம்பாதிக்க முடியாவிட்டால் வைகுண்டத்திற்கு சென்றாலும் சம்பாதிக்க முடியாது. அண்ணாவை விட்டுவிட்டு நீ இங்கே வந்தால், நான் உடனே கிளம்பிச்சென்று அண்ணாவுடன் இருப்பேன்" என்று எழுதி விட்டாள்.

மகளின் குணம் சுலோசனாவுக்கு நன்றாகத் தெரியும். ஆகையால் அவளுக்கு நவத்வீபம் செல்லத் தைரியம் வரவில்லை, ஆனால் மனம் மாத்திரம் இரவு பகல் அதே நினைவாகச் சுழன்று கொண்டிருந்தது.

இந்த விதமாக ஆறு மாதங்கள் கழிந்தன. கடைசியில் அவளாலும் பொறுக்க முடியால் போன போது ஒரு நாள் ஏதோ திருவிழாவைச் சாக்கிட்டு, நந்தனைக் கூடத் துணைக்கு அழைத்துக்கொண்டு, 'ஸ்டீமர்; ஏறினாள். அங்கே சென்று தன் மகளைப் பார்த்தாள். அவள் ரொம்ப வருத்தத்துடனும் இளைத்தும் இருப்பதைப் பார்த்து, "ஏண்டி ஹேமா, இங்கே உன்னைத் தவிர வேறு யாரும் இல்லையா? உனக்கு துணை ஒருவரும் இல்லை" என்றாள். ஹேமா இதற்கு, 'ஆம், இல்லை' என்ற ஒரு பதிலும்சொல்ல வில்லை.

திருவிழாவை முடிந்தது. ஆனால் சுலோசனாவுக்கு அப்பொழுது கூடக்கல்கத்தா செல்லவேண்டு மென்ற எண்ணம் உண்டாகவில்லை, தாயின் மனோபாவத்தை அறிந்த ஹேமா, ஒரு நாள் அவளிடம், "அம்மா, இன்னும் எத்தனை நாள்

மாப்பிள்ளை வீட்டில் இருக்கப்போகிருய்? பார்க்கிறவர்கள் பழிக்கமாட்டார்களா?" என்று கேட்டாள்.

சுலோசன கோபமடைந்து, "ஏன், நான் இருப்பது உனக்குப் பாரமாக இருக்கிறதென்ருல் வெளிப்படையாகச் சொல்லிவிடுவதுதானே! எப்படியும் இது என் பெண் வீடு. அங்கே திரும்பிப் போக, வீடா எனக்கு இருக்கிறது?" என்ருள்.

ஹேமா சிறிது நேரம் பிரமித்துத் தாயின் முகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாள். பிறகு "அம்மா, இது உன் குற்றம் அல்ல. இது பெண்களுடைய சுபாவமான தருமந்தான். நாம் நம்மவர்களையும் சரி பிறரையும் சரி ஒரே நாளில் மறந்துவிடுகிருேம்" என்ருள்.

நாட்கள் கழிந்தன. துர்க்கா பூஜை வந்தது. குணேந்திரன் தடபுடலாகத் துர்க்கா பூஜைக்கு சகோதரிக்கு வெகுமதிகள் அனுப்பி இருந்தான். சுலோசன ஹேமாவைத் தனியாக அழைத்து, "ஹேமா குணேந்திரன் என்னவோ பிரம்மஸமாஜி தான். ஆயினும் செய்ய வேண்டிய பழக்க வழக்கங்களை அறிந்திருக்கிருன்" என்ருள்.

சுலோசன, "என் பிள்ளை நான் இல்லாமலிருந்துங்கூடத் தங்கைக்குத் துர்க்கா பூஜைக்குச் சீர் அனுப்பி யிருக்கிருன். நான் இங்குள்ள எல்லோருக்கும் மிட்டாய் வழங்கிவிட்டு புடவை துணி எல்லாவற்றையும் காட்டி, பூஜை பார்த்துவிட்டுக் கல்கத்தாவுக்குப் போகப் போகிறேன்" என்று தெருவெல்லாம் பிரசாரம் செய்யலானுள்.

அவள் போகும் விஷயத்தைப்பற்றி அன்றைய தினத்திற்குப் பிறகு ஹேமா ஒன்றும் சொல்ல வில்லை. அன்றும் அவள் மௌனமாகவே இருந்தாள். சுலோசனுவினால் இந்த விஷயத்தை அறிந்து கொள்ள முடியவில்லை. அவள் 'பகவான் கிருபை யினால் நீயும் தாயாக ஆவாய். அப்பொழுதுதான் ஒரு தாய் தன் குழந்தையை விட்டுவிட்டுப் பிரிந்து போவதென்பது எவ்வளவு கடினமானது என்பதை நீ அறிந்து கொள்வாய்' என்று மனத்திற்குள் சொல்லிக் கொண்டாள்.

ஆனால் பூஜை முடிந்ததும் சுலோசனுவுக்கு மலேரியா ஜுரம் கண்டு விட்டது. நாளுக்குநாள் அவள் நிலைமை மோசமாகி வந்தது. ஒரு மாதத் திற்குப்பிறகு ஒரு நாள் ஹேமா தாயிடம், "அம்மா; இப்பொழுது ஒன்று பகவான் பெயரைச் சொல். அல்லது பிழைக்க விரும்பினால் அண்ணுவையாவது கூப்பிடு" என்றாள். இதைச் சொல்லும்போதே அவள் கண்கள் கண்ணீரால் நிறைந்துவிட்டன. கண்ணீர் பெருகிய தன் பார்வையை மேலே செலுத்தி உட்கார்ந்து விட்டாள்.

"அப்படியே செய், அம்மா அவனுக்குக் கடிதம் எழுது" என்றாள் சுலோசனு.

ஹேமா வீட்டுக் குமஸ்தாவை அழைத்து, குணேந் திரனுக்குத் தன் தாயை அழைத்துப் போகும்படி கடிதம் எழுதச் சொன்னாள்.

இரண்டு தினங்களுக்குப் பிறகு கல்கத்தாவி லிருந்து மாந்தாவும், வேலைக்காரனும் வந்து சேர்ந் தார்கள். அண்ணுவே வருவான் என்று எண்ணி யிருந்தாள் ஹேமா. அவள் மாந்தாவை அழைத்து,

"குணேந்திரன் ஏண்டி வரவில்லே?" என்று கேட்டாள்.

"அவருக்கு உடம்பு சரியா யில்லே அம்மா. இரண்டுவார மாயிற்று; ஜலதோஷம், ஜுரம், ஒன்று மாற்றி ஒன்று தொந்தரவு செய்து கொண்டிருக்கிறது. இல்லாவிட்டால் அவரே வந் திருப்பார்" என்ருள் மாந்தா.

இரண்டு தினங்களுக்கெல்லாம் சுலோசனு கல்கத்தா சென்ருள். குணேந்திரன் அவளுக்கு வைத்தியம் செய்ய ஏற்பாடு செய்தான். வைத்தியன் யோசனேயின்படி சுலோசனுவை வேலேக்காரர் களுடன் நல்ல காற்றுக்காக மதுபுரம் அனுப்பினுன். போகும்போது சுலோசனு குணேந்திரனிடம், "நீயும் என்னுடன் வா. உன் உடம்பும் ஆரோக்கியமாக இல்லே. இருவருமாகச் சென்று வருவோம்" என்ருள். ஆனுல் குணேந்திரன் ஒப்புக்கொள்ள வில்லே. கல்கத்தாவில் அவனுக்கு வேலே இருந்தது. அவன் தங்கிவிட்டான்.

மதுபுரம் சென்ற சிறிது நாட்களுக் கெல்லாம் சுலோசனு கொஞ்சம் ஆரோக்கியமடைந்தாள். "இன்னும் சற்றுக் குணமானதும் கல்கத்தா வந்து விடுகிறேன்" என்று குணேந்திரனுக்கும் ஹேமா வுக்கும் கடிதம் எழுதினுள்.

* * *

சென்ற வருஷம் மார்கழிக் கடைசியில்தான் ஹேமாவுக்கு திருமணம் நடந்தது. இன்று அதே மார்கழி மாதம் கடைசித் தசமி தினம். சட்டென்று இந்த ஞாபகம் வந்ததும் குணேந்திரனின் கவனம் கண நேரம் புத்தகத்தில் லயிக்காமல் ஓடிற்று.

அவன் தலை நிமிர்ந்து வெறித்த பார்வையுடன் தோட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். இதற்குள் பின் கதவைத் திறந்துகொண்டு புதிதாய் வந்த வேலைக்காரன் உள்ளே வந்து, "பாபுஜீ; ஏதோ தந்தி வந்திருக்கிறது" என்றான்.

குணேந்திரன் திரும்பிப் பார்த்தான். வேலைக் காரன் முன் யோசனையாக தந்திச் சேவகனை மேலே அழைத்து வந்திருந்தான். குணேந்திரனிடம் தந்தியை கொடுத்துக்கையெழுத்துவாங்கிக்கொண்டு ஒரு சலாம் செய்துவிட்டு அவன் சென்றான்.

குணேந்திரன் தந்தியைப் படித்ததும் ஆச்சரிய மடைந்தான். ஹேமா தான் புறப்பட்டு விட்ட தாகவும், 'ஸ்டீமரி'லிருந்து இறங்கி ஹூக்ளி ரெயிலில் ஏறி மாலை நாலு மணிக்கு ஹௌரா ஸ்டேஷனுக்கு வருவதாகவும், வண்டி அனுப்பி வைக்கும்படிக்கும் தந்தி கொடுத்திருந்தாள். "எதற் காக வருகிறாள்? கூட யார் வருகிறார்கள்? கிசோர் பாபு வருகிறாரா இல்லையா? அவள் தனியாகத்தான் வருகிறாளா?" இவை ஒன்றும் அவனுக்கு விளங்க வில்லை. வீட்டில் பெண்டுகள் ஒருவரும் இல்லை. சுலோசனா மதுபுரத்தில் இருக்கிறாள். இதனால் குணேந்திரன் தனியாக இருந்தான். பழைய கோச் வண்டிக்காரனை ஸ்டேஷனுக்கு வண்டி கொண்டு போகும்படி உத்தரவிட்டான். அஸ்தமிக்கச் சற்று நேரத்திற்கு முன்னம் ஹேமா வீட்டிற்கு வந்தாள். கூட வேலைக்காரனும் வேலைக்காரியும் இருந்தார் கள். சில முக்கிய சாமான்களும் இருந்தன. ஹேமாவைப் பார்த்ததும் குணேந்திரன் திடுக்கிட்டு விட்டான். அவன் உடல் நடுங்கியது. "இதென்ன

பைத்தியக்கார வேஷம், ஹேமா?" என்று கேட்டான்.

ஹேமா பூமியில் தலை வைத்து நமஸ்காரம் செய்து, "மாடிக்கு வா, எல்லாம் சொல்லுகிறேன்" என்றாள்.

மாடியில் போய் அசைவற்று உட்கார்ந்து, "அம்மா மாசி மாதத்திற்கு முன் வரமாட்டாளே?" என்று கேட்டாள்.

"அப்படித்தான் எழுதியிருக்கிறாள்" என்றான் குணேந்திரன்.

"அப்படியானால் அதுவரை அவளுக்குத் தகவல் கொடுக்கவேண்டிய அவசியமில்லை. என்ன ஆச்சரியம், பார், அண்ணா! போன வருஷம் இதே நாளில் விடைபெற்றுச் சென்றேன். இந்த வருஷம் அதே நாளில் திரும்பி வந்துவிட்டேன்!" என்றாள்.

குணேந்திரனுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. "எதற்காகத் திரும்பி வந்தாய்?" என்று கேட்டான்.

ஹேமா சுபாவமான குரலில், "திரும்பித்தான் வந்திருக்கிறேன். இனி அங்கே எப்படி இருக்க முடியும்? ஏன், என் வெள்ளைப் புடைவையைப் பார்த்த பிறகு கூட உன்னால் தெரிந்துகொள்ள முடியவில்லையா? முந்தா நாளோடு எல்லாக் காரியங்களும் முடிந்தன. இன்றுதான் புறப்பட்டு வந்தேன்!" என்றாள்.

குணேந்திரன் தன்னை மறந்து அப்படியே உட்கார்ந்துவிட்டான். சிறிது நேரம் பொறுத்துச் சமாளித்துக்கொண்டு "ஒரு தகவலும் தெரிவிக்கவில்லையே நீ; என்ன வியாதி அவருக்கு?" என்று கேட்டான்.

"சென்ற புதன்கிழமை இரவு அவருக்கு வயிற்றுப் போக்கு ஏற்பட்டது. அந்த இடத்தில் எவ்வளவு வைத்தியம் முடியுமோ அவ்வளவும் செய்து பார்த்தோம். ஆனால் ஒன்றும் பயன் படவில்லை. மறுநாள் பத்து மணிக்கு அவர் காலமாகி விட்டார்" என்றாள்.

குணேந்திரன் மௌனமாகக் கண்ணீர் உதிர்க்கலானான். சிறிது நேரம் பொறுத்து கண் களைத் துடைத்துக்கொண்டு, "அம்மா கேள்விப் பட்டால் உயிரையே விட்டுவிடுவாளே; இனிப் பிழைக்க மாட்டாள். எவ்வளவு நாட்களுக்கு அவளுக்குத் தெரியாமல் இருக்கிறதோ அவ்வளவு நாள் நல்லது" என்றான்.

ஹேமா மீண்டும், "என்ன செய்வது, அண்ணா? கடவுளுக்கு விரோதமாக நீங்கள் சூழ்ச்சி செய் தீர்கள். இந்த விஷயத்தைப்பற்றி நான் உங்க ளுக்கு அறிவுறுத்தினேன். நீங்கள் என் பேச்சைக் கேட்கவில்லை. இப்பொழுது அழுவதிலும், 'ஐயோ! அப்பா!' என்பதிலும் என்ன ஆகப்போகிறது? எனக்குப் பசிக்கிறது; என்ன சாப்பிடுவது, சொல்லு. மிகவும் களைப்படைந்திருக்கிறேன். சமையல் செய்து சாப்பிட என்னால் முடியாது. கொஞ்சம் பழமும் பாலும் இருந்தால் போதும் இன்றைப் பொழுதைத் தள்ளிவிடலாம்" என்றாள்.

"காலையில் கூட ஒன்றும் சாப்பிடவில்லையா?" என்று கேட்டான் குணேந்திரன்.

"இல்லை, அதிகாலையிலே 'ஸ்டீமரு'க்கு வர வேண்டியிருந்தது" என்றாள் ஹேமா.

மாசி மாதக் கடைசியில் சுலோசனவும் வந்து சேர்ந்தாள். ஆனல் ஆரோக்கியமாக வந்துசேர வில்லை, போதாக் குறைக்கு வீட்டுக்கு வந்து மகளின் நிலைமையைக் கண்டதும் மீண்டும் படுத்த படுக்கை யானள். இந்தச் சோகம் அவள் இதயத்தில் அம்பு போல் தைத்துவிட்டது. எவ்வளவு வைத்தியம் செய்தும் ஒன்றும் பயன்படவில்லை. ஒரு நாள் அவளுடைய கைகால்கள் வீங்கியிருப்பதைக் கண்டு குணேந்திரன் திகிலடைந்துவிட்டான். அன்று சுலோசனவும் அவனைத் தன் அருகில் அழைத்துத் தனியாக, "ஏன் வீணுக்கு இதெல்லாம் செய்து கொண்டிருக்கிருய்? என்னைச் சற்று நிம்மதியாக விட்டுவிடு; அமைதியாகப் போகிறேன்" என்ருள்.

குணேந்திரன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டே "அம்மா, இப்பொழுது என்ன ஆகி விட்டது அப்படி? நீ, ஏன் அம்மா, நிராசையடைய வேண்டும்?" என்று கேட்டான்.

"நீதான் சொல்லேன். இனி உலகில் நம்பிக்கை வைக்க எனக்கு என்ன இருக்கிறது?" என்ருள் சுலோசன.

குணேந்திரன் தலைகுனிந்து பேசாமல் உட் கார்ந்திருந்தான்.

சுலோசன மீண்டும், "குணேன்! நான் அப்படி ஒன்றும் அறியாதவளல்ல. நான் அறிந்து எந்தப் பாபத்தைச் செய்தேனே அது என்னை உள்ளுக்குள்ளே எரித்துச் சாம்பலாக்கிக்கொண்டு வருகிறது" என்று சொல்லிச் சிறிது மௌனமாகி மறுபடியும், "குணேன், ஒருவிஷயம். உண்மை யைச் சொல்லிவிடு! நான் நன்ருக அறிவேன்.

ஒருநாள் நீ ஹேமாவைக் காதலித்தாய். மறுபடியும் ஒருதரம் முயன்ருல் அவளை மீண்டும் காதலிக்க முடியாதா?" என்று கேட்டாள்.

குணேந்திரன் தலைகுனிந்துகொண்டே, "நான் அவளை வெகு நாளாகக் காதலிக்கிறேன் அம்மா! அப்பொழுதும் காதலித்தேன். இப்பொழுதும் காதலிக்கிறேன். அவளுக்காக நீ எவ்விதக் கவலையும் எடுத்துக்கொள்ளாதே, அம்மா! நான் உயிருடனிருக்கும் வரை அவளுக்கு யாதொரு கஷ்டமும் வராது" என்ருன்.

"நான் இதை அறிவேன். நல்லது உங்கள் இருவருக்கும் இதுவே என் கடைசி ஆசீர்வாதம். ஒருகால் சமயம் வந்தால் அவளிடம் இந்த விஷயத்தைச் சொல்லி விடு. இன்னெரு விஷயம். நான் இங்கே இருக்கும்போது ஹேமா தன் புக்ககத்திலிருந்து, 'அம்மா' நீ இந்த வீட்டில் இருந்து கொண்டே காற்று வாங்கி நவத்வீபத்தையும்கூட உத்தாரணம் செய்துவிடலாம். வீட்டில் இருந்து புண்ணியம் சம்பாதிக்க முடியாவிட்டால் வைகுண்டம் சென்ருலும் முடியாது" என்று கடிதம் எழுதியிருந்தாள். குணேன், சாகும்போது என் தலையில் கை வைத்து ஆசீர்வாதம் செய். அதனுல் நான் பாபத்திலிருந்து விடுதலை யடைகிறேன். குணேன், என்னுடைய குற்றம் எவ்வளவு பெரியது? என்பதை என்னைத் தவிர வேறு யாரும் அறிய முடியாது" என்ருள்.

குணேந்திரன் அழலானுன். ஏனெனில் அவன் சுலோசனுவைத் தாயைப்போல் மதித்து அன்பு செலுத்தி வந்தான்.

"ஹேமாவிடம் நான் எதையும் சொல்ல முடியாது. அவள் முகத்தைப் பார்த்ததுமே என் இதயம் ஜ்வாலை விட்டெரிகிறது. உலகத்தில் எல்லோரும் மாற்றாந்தாயின் கொடுமைகளைப் பற்றிப் பேசுவார்கள். ஆனால் நான் அவர்களை யும் விடக் கொடுமை செய்தவளாக ஆகிவிட்டேன்" என்று துக்கத்துடன் கூறினாள் சுலோசனா.

மறுநாள் அவளுக்கு நோய் அதிகரித்தது. பிழைப்பாள் என்ற நம்பிக்கையே போய்விட்டது. மூச்சு விடக்கூடக் கஷ்டமாகி விட்டது. அந்தச் சமயத்தில் அவள் ஹேமாவை அருகில் அழைத்து அவள் கைகளை எடுத்து முத்தமிட்டுத் தடவிக் கொண்டே "ஹேமா, இனி நான் விடைபெற்றுக் கொள்கிறேன்" என்றாள்.

ஹேமா தன் தாயின் மார்பில் முகத்தை வைத் துக்கொண்டு அழலானாள். சுலோசனா, சிறிது நேரம் பொறுத்து அவளை எழுப்பி, "அழாதே, ஹேமா! சுகதுக்கத்தில் பன்னிரண்டு வருஷம் உன்னை மார்பில் வைத்து வளர்த்தேன்; இன்று நாள் வந்துவிட்டது. இப்பொழுது உன் தந்தையிடம் செல்கிறேன். இன்று எனக்கு மகிழ்ச்சி தரும் நாள். இன்று நான் அழவில்லை. ஹேமா, உன்னை இந்த மாதிரி பாழாக்காமலிருந்தால் நான் சந்தோஷமாகச் செல்வேன். இன்று துக்கத் தாலும் வெட்கத்தாலும் உன் முகத்தைக்கூடப் பார்க்க என்னால் முடியவில்லை" என்றாள்.

ஹேமா அழுதுகொண்டே, "நீ ஏன் அம்மா இந்த மாதிரி சொல்கிறாய்? என் தலை எழுத்து எப்படியோ அப்படித் தானே நடக்கும். இதில்

உன்னுடைய குற்றம் என்ன இருக்கிறது?" என்றாள்.

சுலோசனா அழுதுகொண்டே, "என்னுடைய தலையில் நானே மண்ணை வாரிப் போட்டுக் கொண்டேனடி. என் தலை எழுத்துப்படி ஆயிற்றென்று சொல்லுகிறாய். ஆனால் உன்னைப் போல் தலையெழுத்துள்ள பெண்கள் இந்தத் தேசத்தில் சிலர்தான் இருப்பார்கள். நான் மாத்திரம் நடுவே பிரவேசித்து இடைஞ்சல் விளைவித்திராமலிருந்தால் உன் அதிருஷ்டம் எப்படி இருந்திருக்குமோ? நான் எல்லாவற்றையும் அறிவேன். ஆகையால்தான் இந்தத் துக்கத்தை ஆற்ற இடம் தேடியும் எனக்குக் கிடைக்கவில்லை. அறியாமையினால் செய்த பாபத்திற்குப் பிராயச்சித்தம் இருக்கிறது. ஆனால் தெரிந்து செய்த பாபத்திற்கு விமோசனம் ஏது?" என்றாள்.

அவள் கண்களிலிருந்து கண்ணீர் முத்துக்கள் உதிர்ந்து விழலாயின. ஹேமா தன் தலைப்பினால் அவைகளைத் துடைத்தாள். சற்றுப் பொறுத்து, சுலோசனா மீண்டும், "ஹேமா, தாயின்மேல் எந்தக் கோபமும் வைக்காதே. அந்த வார்த்தையைச் சொல்வதால் உனக்கு ஏதாவது அமங்களம் உண்டாகுமே என்று நான் சொல்லவில்லை. இல்லாவிட்டால் இன்று இறக்கும் சமயத்தில் கை குவித்து......" என்று ஏதோ ஆரம்பித்தாள்.

ஹேமா சட்டென்று தாயின் வாயில் கை வைத்து மூடி அழுதுகொண்டே, "அம்மா, என்ன செய்தால் நீ நிம்மதி யடைவாய் சொல். நான் அப்படியே செய்கிறேன். நான் என்றாவது உன் வார்த்தையைத் தட்டி இருக்கிறேனா?" என்றாள்.

சுலோசனை மிகுந்த சிரமத்துடன் நடுங்கும் தன் கரத்தை ஹேமாவின் சிரசில் வைத்து, "ஹேமா, என் உள்ளம் வெந்துகொண்டிருக்கிறது. நான் என்ன சொல்ல வேண்டுமோ அதைக் குணேந்திர னிடம் சொல்லிவிட்டேன். அவசியம் நேரும் பொழுது அவன் அதை உன்னிடம் சொல்லுவான். நீ இன்று இந்தப் புடைவையைக் களைந்துவிட்டு ஒரு வருஷத்திற்குமுன் அணிந்திருந்த புடைவை யைக் கட்டிக்கொண்டு, சென்ற வருஷம் தசரா அன்று எந்த நகைகளை அணிந்துகொண்டு எனக்கு நமஸ்காரம் செய்தாயோ அவைகளை அணிந்து கொண்டு வா. குணேந்திரன் வாங்கித் தந்த அந்த ஆடையாபரணங்களை அணிந்து என்முன் ஒரு கணம் வந்து உட்காரு, நான் செய்த பாபத்தி லிருந்து எனக்கு விடுதலை அளிக்கவேண்டும்" என்றாள்.

ஹேமா பேசாமல் எழுந்து சென்று தாயின் கட்டளையைப் பூர்த்தி செய்துகொண்டு வந்து உட்கார்ந்தாள். தாயின் அதரங்களில் ஆனந்தத் தின் ரேகை படர்ந்தது. அவள் சாந்தியும் ஆவலும் நிறைந்த குரலில், "இந்த வயசுவரை ஒருநாளும் ஏற்படாத அந்த ஞானம், அந்த புத்தி, மதுபுரத்தி லிருந்து திரும்பிவந்து உன்னைப் பார்த்த அந்தக் கணத்திலே ஏற்பட்டது. தலையில் இடி விழுந்தது என்று ஜனங்கள் சொல்லுவார்கள். ஆனால் அது எப்படி என்று எனக்குத் தெரியாது. ஆனால் அன்று என் தலையில் விழுந்த இடியினால் ஏற்பட்ட வடு நிசமான இடியினால்கூட ஏற்பட்டிருக்க முடி யாது. ஹேமா, என் விரோதிகளுக்குக்கூட இந்தத்

துன்பம் வரவேண்டாம். என்னுடைய ஆணை இது. ஹேமா, நீ இந்த உடைகளை ஒரு போதும் மாற்றாதே. எந்தப் படுபாவிகள் விதவைகளுக்கு அம்மாதிரி ஆடைகளை நிர்ணயம் செய்தார்களோ! நான் இன்று சாபமிடுகிறேன். அவர்களும் என் போல் இந்தத் துக்கத்தை அனுபவிக்கட்டும். இல்லை, இல்லை; ஹேமா, என்னைத் தடுக்காதே! நாளை இதெல்லாம் கூற நான் இருக்கமாட்டேன். இன்று நான் உன் தந்தையிடம் சென்று அங்கிருந்து உன் சௌபாக்கியத்தைக் காண விரும்புகிறேன்'' என்றாள்.

இதன்பின் அவள் பேச்சுக்குளறிவிட்டது. தலைப்பினால் ஹேமா அவளுடைய கண்ணீரை மெள்ள மெள்ளத் துடைக்கலானாள். வெளியே செருப்புச் சப்தத்தைக் கேட்டு ஹேமா புடைவையை இழுத்துவிட்டுக் கொண்டாள். இதற்குள் டாக்டருடன் குணேந்திரன் அறை வாசலில் வந்து நின்றான். அவனைக் கண்டதும் சுலோசனா வருத்தத்துடன் "குணேன், இப்பொழுது டாக்டரை ஏன் அழைத்துக்கொண்டு வந்தாய்? அவரை அப்படியே விடை கொடுத்தனுப்பிவிட்டு, நீ வந்து என் பக்கத்தில் உட்காரு'' என்றாள்.

"வரத்தான் வந்தார். ஒரு முறையாவது பார்த்துவிட்டுப் போகட்டுமே!" என்றான் குணேந்திரன்.

"இல்லை, இல்லை, குணேன்! இப்பொழுது என்னைத்துன்பப் படுத்தாதே. அவரை அனுப்பி விடு'' என்றாள் சுலோசனா.

டாக்டர் ஆங்கிலேயர் இவைகளொன்றையும் அறிந்து கொள்ள முடியவில்லை. அவர் உள்ளே வந்து நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு 'தர்மாமீடரை' எடுத்தார்.

சுலோசன பயத்துடன், "இவர் புத்தியைப் பார். இந்தச் சின்னஞ் சிறு கண்ணாடியினாலேயா என் ஜுரத்தை அளந்து பார்க்க முடியும்? போ, குணி! நந்தனை அனுப்பியாராவது நல்ல நாட்டு வைத்தியன் ஒருவனை அழைத்து வரச் சொல். அவன் வந்து பார்த்து என் பிராணன் எப்போது போகும் என்று சொல்லட்டும். மருந்து ஒன்றும் கொண்டு வரவேண்டாம் என்றும் சொல்லிவிடு!" என்றாள்.

சுலோசனாவுக்கு அந்த அறையிலிருந்த கண்ணாடி விளக்கின் வெளிச்சம் அதிகமாக இருந்தது. ஆகையால் அதை அணைத்துவிட்டு அங்கே மெழுகுவர்த்தி கொளுத்திவைப்பது வழக்கமாயிருந்தது. சாயங்காலம் ஆனதும் வேலைக்காரி மெழுகுவர்த்தி கொளுத்தின தட்டைக் கொண்டுவந்து மேஜைமேல் வைத்தாள்.

"இன்றிரவு தான் எனக்குக் கடைசி இரவு. இன்றாவது என் மனத்திலுள்ள உண்மையை வெளிப்படையாகக்கூறாவிட்டால், வெட்கமின்றி உள்ளத்தை வார்த்தையில் கொட்டாவிட்டால், பகவான் எனக்கு இன்னும் அதிகத்தண்டனை அளிப்பார். ஆனால் குற்றமற்ற இவர்களுக்கு யாதொருதண்டனையையும் அளிக்கவேண்டாம். என் பாபத்தின் பலனை எனக்கே கொடுத்து என்னை ஒழிக்கட்டும்."

என்று சொல்லி, சுலோசன சிறிது நேரம் மௌனமாக இருந்து ஒரு பெருமூச்சு விட்டு, "ஹா!" என்ருள். ஹேமா பயந்து அவள் முகத்தருகில் குனிந்து, "என்ன அம்மா?" என்று கேட்டாள்.

சுலோசன மெலிந்த குரலில், "ஒன்றுமில்லை ஹேமா! நீ தனியாகவா அம்மா இருக்கிருய்? என் கண்களால் பார்த்த குணேந்திரனுடைய அந்த முகத்தைக் கண்டு கல்லும் கரைந்துவிடுமே. ஆனல் என் மனம் இளகவில்லை. அவன் நமக்கு என்ன செய்யவில்லை? ஆனல் இதைப்பற்றி இப்பொழுது பேசவேண்டாம். ஆனல் ஒரு வார்த்தை சொல்லி வைக்கிறேன், ஹேமா! ஒரு நாளும் நீ அவன் வார்த்தைகளைத் தட்டாதே. அவனுக்குத் துக்கம் உண்டாக்காதே. இந்த மாதிரி மனிதர்களின் மனத்திற்குக் கஷ்டத்தைக் கொடுப்பது கடவுளுக்கு அபராதம் செய்ததாகும், இதை ஒருநாளும் நீ மறக்காதே. எது அவனுடைய தர்மமோ அதுதான் உன் தர்மமும். ஹேமா, இது என் உத்திரவு அல்ல. யாருடைய உத்தரவின்மேல் நீங்கள் இருவரும் ஒரு நாளைச் சந்திப்பினல் பிரிக்க முடியாதபடி ஒன்ருகி விட்டீர்களோ அவருடைய உத்தரவு. சீ! ஹேமா இதில் வெட்கம் என்ன? கடவுளே, எல்லோர் மனத்திலும் ஒளிந்து நின்று அந்தர்யாமியாகப் பேசும் போது அதைத் தடுக்காதே. அந்த வார்த்தைகளை அலட்சியம் செய்யாதே. அவருடைய உத்தரவு என் உள்ளத்தில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. ஆனல் நான் அதை என் அறிவீனத்தால், கேட்டும் கேட்காதவளாகிவிட்டேன். அதை எதிர்த்து அசட்டை செய்

தேன். அதனுடைய பலனை இன்று அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். இதுதான், உங்கள் இரு வருக்கும் நான் கடைசியாகச் சொல்லுவது. என் அநியாயத்தை, என்னுடைய அந்தப் பாபத்தை ஒப்புக்கொண்டு, என்னால் விளைந்த கேட்டை நிரந் தரமாக்கி வைத்திருக்க வேண்டாம்'' என்றாள்.

மாந்தா வந்து, "வைத்தியர் வந்திருக்கிறார்'' என்றாள்.

சுலோசனை மெள்ள, "அவரை அழைத்துக் கொண்டு வா, ஹேமா! நீ சற்று, வெளியே போ'' என்றாள்.

தாய் இறந்தவுடனேயே ஹேமாவின் பழக்க வழக்கங்களில் ஆச்சரியகரமான மாறுதல் காணப் படலாயிற்று. எதிரில் இருந்துகொண்டே அவள் தன்னைத்தான் ஒரு பாதாளத்தில் ஆழ்த்திக் கொண்டு வந்தாள். குணேந்திரன் சாந்தமும் உறுதியும் கொண்ட மனிதர்களைச் சேர்ந்தவன். இந்த மாறுதலை அவன் அறிந்துகொண்டான். ஆனால் அவன் மௌனமாக இவைகளைச் சகித்து வந்தான்.

திடீரென்று ஹேமாவுக்குத் தர்மத்தில் இவ் வளவு பற்று உண்டானதன் காரணம் என்ன? அவளுக்குத்தான் தெரியும். அவள் நாடகம், நாவல், கதைகள் இவைகளை எல்லாம் எடுத்து தூர வைத்துவிட்டு, ராமாயணம், பாரதம், கீதை, உப நிஷதம் இவைகளிலேயே ஆழ்ந்திருந்தாள். ஆனால் தாயின் ஆணையை ஞாபகத்தில்வைத்து அன்றைய தினத்திற்குப் பிறகு அவள் வெள்ளைப் புடைவை அணிந்து கொள்ளவில்லை. கையில் வளைகளும் காதில் தோடும் அணிந்துக்கொண்டிருந்தாள். எனினும் வைதவ்யத்தின் எல்லாச் சட்ட திட்டங் களையும் சிரத்தையுடன் ஏற்றுக் கொண்டிருந்தாள். விசேஷமான சாப்பாடுகளை விலக்கித் தனக்கு வேண்டிய போஜனத்தைத்தானே சமையல் செய்து கொண்டாள். தனக்கு வேண்டிய வேலை

களைத் தானே செய்துகொண்டு; ஓய்வு நேரத்தை யெல்லாம் தர்மசம்பந்தமான சர்ச்சைகளில் கழிக்க லானுள். எப்பொழுதாவது குணேந்திரன் அவள் அருகில் வந்து உட்காருவான் உடனே அவள் ஏதா வது ஒரு வேலையைச் சாக்குச் சொல்லி அங்கிருந்து எழுந்து வந்துவிடுவாள். அவள் இப்பொழுது அவனிடம் பயப்படலானுள். இந்தமாதிரி அவள் திடீ ரென்று எழுந்து சென்றபின் குணேந்திரன் வருத் தத்துடன் வெறித்த பார்வையுடன் தோட்டத்தின் பக்கம் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருப்பான்.

நாட்கள் கழியக் கழிய சிறிய சிறிய விஷயங் களில்கூட ஹேமாவின் ஆசார விவகாரங்கள் திடமடையலாயின. ஜெயில் வார்டர் எப்படித் தன் கீழ் உள்ள கைதிகளின் கொட்டத்தை அடக்கி விடு வாரோ அதேபோல் ஹேமாவும் ஜாக்கிரதையுடன், தன் இதயத்தில் வசிக்கும் ஒரு குற்றவாளியை இந்தத் தர்ம சிந்தனையில் ஆழ்த்திவிட முயன்று கொண்டிருந்தாள். ஒருநாள் திடீரென்று ஹேமா குணேந்திரனிடம் வந்து, "குணி அண்ணு, எனக்கு மந்திரம் தெரியுமே!" என்றுள்.

குணேந்திரன் அவள் முகத்தைப் பார்த்து, "என்ன மந்திரம்? குரு மந்திரமா?" என்று கேட்டான்.

"ஆமாம்."

குணேந்திரன் சிரித்துக்கொண்டே, "ஹேமா நீ ஒன்றுக்கும் பயப்படவேண்டியதில்லை. உன் உடம்பையும், ஆத்மாவையும் காப்பாற்றிக்கொள்ள தினம் ஒரு கவசம் அணிய வேண்டிய அவசியம் இல்லை" என்றுன்.

ஹேமாவுக்கு இந்த வார்த்தைகளின் அர்த்தம் விளங்கவில்லையோ என்னவோ, அவள் சிறிது நேரம் குணேந்திரனின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்து விட்டுப் பிறகு, "ஏன், குருமந்திரம் அவசியமில்லையா?" என்று கேட்டாள்.

"ஏன் இல்லே? அவசியந்தான். ஆனால் உன் வயது அதற்கு ஏற்றதல்ல. இதைத் தவிர உங்கள் குரு யார் என்பதும் எனக்குத் தெரியவில்லை" என்றான் குணேந்திரன்.

"அந்தக் குருவைப்பற்றி எனக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை. நான் உன்னிடம் தான் தீக்ஷை பெற்றுக் கொள்கிறேன்" என்றாள் ஹேமா.

குணேந்திரன் ஆச்சரியத்துடன், "என்னிடமிருந்தா? எனக்கு என்ன தெரியும் தீக்ஷையும் கீக்ஷையும்? தவிர, நீ ஹிந்து. நான் பிரம்ம ஸமாஜி!" என்றான்.

"எனக்கு அது தெரியாது. உன்னுடைய தர்மம் எதுவோ அதுதான் என்னுடைய தர்மமும் என்று அம்மா சொல்லி இருக்கிறாள். நல்லது, குணி அண்ணா, இதன் கருத்துதான் என்ன?" என்று கேட்டாள் ஹேமா.

இதன் கருத்து குணேந்திரனுக்குத் தெரியும். அவன் அதைச் சொல்லாமல் சுபாவமாக "எல்லாத் தர்மமும் ஒன்றுதான் என்பது அம்மாவின் அபிப்பிராயமாக இருக்கலாம்" என்றான்.

"ஆனால் எல்லாத் தர்மமும் ஒன்றல்லவே?" என்றாள் ஹேமா.

குணேந்திரன் சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டு, "ஹேமா, இந்த விஷயங்களைப் பற்றி நான் பிறருடன் தர்க்கம் செய்வதில்லை" என்றான்.

"நான் தான் அன்னியள் அல்லவே?"

"நீ எனக்கு ரொம்ப வேண்டியவள் தான். ஆயினும் இந்த விஷயத்தைப்பற்றி உன்னிடமும் சர்ச்சை செய்ய மாட்டேன்."

ஹேமா சலிப்படைந்து ஒரு பெருமூச்சு விட்டு, "நீ சொல்லாவிட்டால் நான் அறிந்துகொள்வது எப்படி?" என்றாள்.

குணேந்திரன் அவள் முகத்தைப் பார்த்து அனுதாபத்துடன், "நீ எதை அறிந்துகொள்ள விரும்புகிறாய்?" என்று கேட்டான்.

"குணி அண்ணா, நான் அன்று உன் தட்டில் சாப்பிட்டபொழுது நீ இதைத் தடுத்து நான் செய்தது சரியல்ல என்றாய். யாருக்கு எது தர்மமோ அவர்கள் அதை மதித்து நடக்க வேண்டுமென்றாய். இன்று எல்லாத் தர்மமும் ஒன்று என்று சொல்லுகிறாய். இதில் எது உண்மை?" என்றாள் ஹேமா.

"அன்று நான் சாதாரணமாகச் சொன்னேன். ஆயினும் இரண்டு விஷயங்களும் உண்மைதான். ஜாதியும் தர்மமும் வெவ்வேறு விஷயங்கள். ஒன்று தேசாசாரத்தையும் லோகாயதத்தையுமே அடிப்படையாகக் கொண்டது. மற்றொன்று இகம், பரம், இரண்டிற்கும் சாதனமானது. தர்மத்தை ஒப்புக்கொண்டு போகும் பொழுது, ஜாதியை ஒப்புக்கொண்டு போவ

தாகவோ, ஜாதியை ஒப்புக் கொண்டு போகும் போது, தர்மத்தை ஒப்புக்கொள்வதாகவோ கட்டாயம் ஒன்றுமில்லை. ஜாதியை ஒப்புக் கொள்ளாதபோது கஷ்டத்தை எதிர்த்து நிற்க வேண்டி இருக்கிறது. எல்லோரும் இந்தக் கஷ்டத்தைச் சமாளித்து நிற்க முடியாது. எப்பொழுதுமே இதற்கு அவசியமும் இல்லை. ஆகையால்தான் அன்று உன்னிடம் அப்படிச் சொன்னேன்" என்று கூறிவிட்டு, சிறிது நேரம் மௌனமாக இருந்தான். பிறகு, "ஹேமா, இவை இரண்டும் தனித்தனியானவை. ஆனால் ஒன்றுபட்டவை. தேச பேதத்தால் தர்ம பேதங்களும் ஏற்படுகின்றன. இதுதான் இவை ஒன்றுபட்டிருக்கின்றன என்பதன் கருத்து. தர்மத்தின் மூலாதார விஷயம், பரகாலத்திய விஷயம். மரணமே நம்முடைய முடிவல்ல. இதுவே அந்த மூலாதார விஷயம். இந்த மூலத்தில்தான் நீ ஹிந்துவாக நிற்கிறாய். நான் பிரம்மஸமாஜியாக நிற்கிறேன். எல்லாத் தர்மங்களும் கடவுளை ஒப்புக்கொள்ளுகின்றன. இது கூட விஷயமில்லை. கேவலம் மரணத்தினால் மட்டும் விடுதலை கிடைத்து விடுவதில்லை, என்ற தத்துவத்தை இந்தியா முதல் உலகம் முழுமையுமுள்ள சகல தர்மங்களும் ஒப்புக்கொள்ளுகின்றன, மரணத்திற்குப் பிந்திய விஷயத்தைப்பற்றி நீயும் நினைக்கிறாய். நானும் நினைக்கிறேன். நாம் இருவரும் வேறு வேறுவிதமாக யோசிக்கலாம். ஆனால் நாம் இருவரும் யோசிக்கும் விஷயம் என்னவோ ஒன்றுதான். அம்மா இறக்கும்போது இதே பாவத்தில்தான் உனக்கு உபதேசித்துச் சென்றாள்!" என்றான்.

ஹேமா வெகு நேரம் வரை சும்மா இருந்து விட்டு, "சும்மா யோசித்தால் மாத்திரம் காரியம் ஒன்றும் ஆகிவிடாது. அதற்கு ஏதாவது உபாயம் செய்தே ஆகவேண்டும்" என்றாள்.

"கட்டாயம்! அந்த உபாயத்தைத் தேடுவதில் தான் இவ்வளவு சச்சரவும் விவாதமும். உன்னுடைய உபாயம் எனக்குப் பிடிப்பதில்லை. என்னுடைய உபாயம் உனக்குப் பிடிப்பதில்லை. இது அனுமான வஸ்து. பிரமாண வஸ்து அல்ல. இதைச் சொல்லிவிட்டதாலேயே இந்த விவாதம் முடிவடைந்துவிட முடியாது. சச்சரவும் நிச்சயமாகி விடாது. ஆமாம், உனக்குச் சமையலுக்கு நேரமாகி விட்டதே, ஹேமா!" என்றான் குணேந்திரன்.

ஹேமா ஒன்றும் சொல்லாமல் மெள்ள மெள்ள எழுந்து சென்றாள். குணேந்திரன் வெறித்த பார்வையுடன் திறந்த வெளியைப் பார்த்துக் கொண்டே உட்கார்ந்து விட்டான்.

"குணி அண்ணு!"

குணேந்திரன் திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தான். ஹேமா நின்றிருந்தாள். "என்ன ஹேமா?" என்று கேட்டான் குணேந்திரன்.

"அண்ணு, நான் சென்று கொண்டிருக்கும் வழி சரியானதுதானு?" என்றாள் ஹேமா.

"நான் எப்படிச் சொல்ல முடியும், ஹேமா? இதை நீயேதான் அறிய முடியும். அதில் ஆனந்த மும் சாந்தியும் கிடைத்தால், நிச்சயம் அது சரியான மார்க்கந்தான்" என்றான் குணேந்திரன்.

"எனக்கு ஒன்றும் கிடைக்கவில்லையே."

அவளுடைய கிலேசமடைந்த குரலைக்கேட்டு குணேந்திரனின் கண்களில் கண்ணீர் வந்துவிட்டது அவன் பிரயாசையுடன் அதைத் தடுத்துக்கொண்டு, தயக்கத்துடன் "பின் ஏன் செல்கிறாய்?" என்று கேட்டான்.

"குணி அண்ணா! நான் அறியேன். யாரோ என்னை இழுத்துச் செல்கிறார்கள். யாரோ பலவந்தமாக என்னைச் செய்யச் சொல்வதாகத் தோன்றுகிறது. நான் என்னைத் தடுத்துக்கொள்ள முடியவில்லை" என்றாள் ஹேமா.

என்ன சொல்வது? என்பதைப்பற்றி குணேந்திரனால் சட்டென்று ஒன்றும் யோசிக்க முடியவில்லை. அவன், "வாஸ்தவந்தான்; புதிதல்லவா. இப்பொழுது ஆனந்தம் கிடைக்கா விட்டாலும் பின்னால் கட்டாயம் கிடைக்கும்" என்றான்.

ஹேமா ஆவலுடன், "கிடைக்குமா?" என்று கேட்டாள்.

"நிச்சயம் கிடைக்கும். தர்மத்தினால் சாந்தியும் ஆனந்தமும் கிடைக்காவிட்டால் வேறு எதனால் கிடைக்கும்? நான் உனக்கு ஆசீர்வாதம் செய்கிறேன். நிச்சயம் நீ ஒருநாள் ஆனந்தமடைவாய்" என்றான் குணேந்திரன்.

இரண்டு தினங்களுக்குப் பிறகு மேலே திறந்த மாடியில் குணேந்திரன் நிலவில் ஒரு ஜமக்காளத்தை விரித்துப் படுத்துக்கொண்டிருந்தான். ஹேமா வந்து அவன் காலடியில் அமர்ந்து, "குணி அண்ணா, உன் கால்களை வருடட்டுமா?" என்று கேட்டாள்.

"வருடு" என்று சொல்லி குணேந்திரன் கண்களை மூடிக்கொண்டான்; நில வொளியில் திகழும் ஹேமாவின் முகத்தைப் பார்க்க அவனுக்குத் தைரியம் வரவில்லை. ஹேமா பேசாமல் கால்களை வருடிக்கொண்டே இருந்தவள், சட்டென்று, "குணி அண்ணா, விதவைகள் மறுமணம் செய்து கொள்வது சரியா?" என்று கேட்டாள்.

குணேந்திரன் கண்களை மூடிக்கொண்டே, "உன் அபிப்பிராயம் என்ன?" என்று கேட்டான்.

"நான் சொல்ல வரவில்லை. கேட்பதற்காக வந்திருக்கிறேன்" என்றாள் ஹேமா.

"அப்படியானால் பாதங்களை வருடுவதுதான் அதற்குப் பூர்வ பீடிகைபோலிருக்கிறது." என்றான் குணேந்திரன்.

ஹேமா, சுபாவமான குரலில், "இல்லை. அதொன்றுமில்லை. உன் காலருகில் அமர்ந்தாலே எனக்கு உன் பாதங்களை வருட வேண்டுமென்று ஆசை தோன்றுகிறது" என்றாள்.

குணேந்திரன் மௌனமாக இருந்தான். தன் வார்த்தைகளில் அவன் நம்பிக்கை வைக்க முடியவில்லை.

"என்ன, பதில் சொல்லமாட்டாயா?" என்றாள் ஹேமா.

அப்பொழுது குணேந்திரன் மௌனமாகவே இருந்தான். ஹேமா அவன் பாதங்களில் மெதுவாக ஒரு கிள்ளுக் கிள்ளி, "சீக்கிரம் சொல்லு" என்றாள்.

"சொல்லுகிறேன். முதலில் என் கேள்விக்குப் பதில் சொல்."

"என்ன?"

"உன் கணவனை நீ காதலித்தாயா?"

"கொஞ்சங்கூட இல்லை. இந்த விஷயமே என் மனத்தில் தோன்றவில்லை. அவ்விடத்திலிருந்து ஒரு தம்படி கூட நான் என்னோடு கொண்டு வரவில்லை. அவர் கொடுத்த புடவையைக் கூடக் கட்டிக்கொண்டு வரவில்லை. வயிற்றுக்கு எவ்வளவு சாப்பிட்டேனோ அதைவிட நான்கு மடங்கு கொடுத்துவிட்டு வந்திருக்கிறேன். இதுதான் அவருக்கும் எனக்கும் உள்ள சம்பந்தம்" என்றாள் ஹேமா.

"கற்புள்ள மங்கையர்கள் தங்கள் கணவனைக் காதலிக்கிறார்கள். விதவையான பிறகும் அவனுடைய முகத்தை ஞாபகம் வைத்துக்கொண்டு மறு விவாகம் செய்து கொள்வதில்லை. உன் அம்மாவைப் போல் அவர்களும் இறந்தவுடன் தன் கணவனிடம் செல்கிறோம் என்ற நம்பிக்கையை மனத்தில்

வைத்துக் கொண்டிருப்பார்கள்" என்ருன் குணேந்திரன்.

ஹேமா சொன்னுள்:—என்னை நீங்கள் பலவந்தமாகக் கல்யாணம் செய்து கொடுத்தீர்கள். நானும் ஸதிதான், பதிவிரதைதான்; ஏனென்ருல் நானும் இறந்த பிறகு 'உன்னிடம்' வந்து விடுவேன் என்ற நம்பிக்கையை மனத்தில் வைத்துக் கொள்வேன். என்ன குணி அண்ணு! இறந்த பின் நான் உன்னிடம் வரமுடியுமா, முடியாதா சொல்லு?" என்று கேட்டாள் ஹேமா. அவளுடைய வார்த்தையில் தடங்கலோ, வருத்தமோ இல்லை. லஜ்ஜை என்பது துளியும் கிடையாது. அப்போதைய ஹேமாவுக்கும் இன்றைய ஹேமாவுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லாததுபோல் யாரோ ஒரு பெண் மற்ருெரு பெண்ணைப் பற்றிக் கூறுவதைப்போல் இருந்தது. குணேந்திரன் பிரமித்துப் பேசாமலிருந்தான். ஹேமா மீண்டும் அவனிடம், "சொல்; உன்னிடம் வந்து சேருவேனு மாட்டேனு?" என்று கேட்டாள்.

"முடியாது" என்ருன் குணேந்திரன்.

"ஏன் முடியாது?"

"என்னுடைய கர்ம பலன் என்னை எங்கே இழுத்துச் செல்லுமோ எனக்குத் தெரியாது. உன் கர்மபலன் உன்னை எங்கு இழுத்துச் செல்லுமோ உனக்கும் தெரியாது. நான் என் கர்மதோஷத்தினுல் இறந்து போனபின் ஏதாவது மிருகமாகப் பிறப்பேன். நீ ஒருகால் பிராம்மணப் பெண்ணுகவே பிறப்பாய். அப்பொழுது என்னை நீ எப்படி அடையமுடியும்.

"கர்மபலன் உண்மையானால் பதிபத்தினிகளுடைய சம்பந்தம் எந்த விதத்திலும் உண்மையாக முடியாது. நம்முடைய இந்தக் கற்பனை உறவு கூட மிகத் துச்சமானதுதான். இவ்வளவு பேதம், இவ்வளவு பிரிவினைகள், ஏற்றத் தாழ்வு இவைகளெல்லாம் கர்ம பலன் உண்மையானால் நடக்கக் கூடியவையே. ஆனால் காதலின் எந்தச் சக்தியும் இதை அழித்துவிட முடியாது. இந்த உலகத்தில் எத்தனையோ துஷ்டக் கணவர்களுடைய மனைவிமார்கள் பதிவிரதைகளாக இருக்கிறார்கள். அந்தக் கணவன்மார்கள் இறந்தபின் அவர்களுடைய கர்மானுசாரப்படி மாடுகளாகப் பிறக்கிறார்கள். இது உங்கள் சாஸ்திரத்திலேயே எழுதியிருக்கிறது. பின் அவர்களுடைய அந்தப் பதிவிரதைமனைவிமார் நல்லகருமங்களைச் செய்து இறந்தும் அந்தக் கணவன்மார்களுக்காகத் தாங்களும் பசுக்களாகப் பிறந்து அவர்களுடன் வசிக்க வேண்டும் என்று நீ விரும்புகிறாயா? அப்படி இருக்க முடியாது. அந்த மாதிரியானால் நல்லகர்மம் அல்லது கெட்ட கர்மம் என்ற எவ்வித வித்தியாசமும் இல்லாது போய்விடும். மனைவி தன்னுடைய நற்கருமங்களால் சுவர்க்கம் செல்லலாம். புருஷன் தன் கர்மபலானுசாரம் ஜன்ம ஜன்மாந்தரங்கள் நரகத்தில் இருக்கவேண்டி ஏற்படும். ஆயிரம்தான் ஆசையும் காதலும் இருந்தாலும் இருவரும ஒன்றாக முடியுமா, ஹேமா?" என்றான் குணேந்திரன்.

ஹேமா வெகுநேரம் யோசித்தாள். பிறகு மெள்ள மெள்ள, "ஆனால் உண்மையாக நாம் வேண்டுவது கிடைக்கவேறுவழி ஒன்றுமில்லையா?" என்று கேட்டாள்.

" இல்லை. அதற்கு அவசியமும் இல்லை. எதனிடம் சென்றால் பிறகு யாரிடமும் செல்ல வேண்டுமென்ற ஆசையே ஏற்படாதோ அதனிடம் செல்ல நினைப்பதுதான் நல்லது. அதாவது அதனால் எல்லாவித ஆசையும் தனக்குத் தானே பூர்த்தியாகி விடும். உன்னுடைய இந்த மார்க்கத்திலிருந்து உன்னை யாரும் திருப்ப முடியாது. எங்களால் ஏற்பட்ட துன்பங்கள்யாவும் ஒரு நாள் உனக்கு ஸார்த்தகமாகும். இதுதான் என்னுடைய மனத்தாலும் வாக்காலும் உனக்களிக்கும் ஆசீர்வாதம்" என்றான் குணேந்திரன்.

நிலா வெளிச்சத்தில் குணேந்திரனுடைய கண்களில் கண்ணீர் பெருகுவதை ஹேமா நன்ருகப் பார்க்க முடிந்தது. அவள் அவனுடைய பாதங்களில் சிரம் வைத்து நமஸ்கரித்துவிட்டு மெள்ள மெள்ள எழுந்து சென்றாள். இந்தமாதிரி இதற்குமுன் பலதடவை எழுந்து சென்றிருக்கிறாள். ஆனால் இன்று குணேந்திரனுடைய மனம், வைராக்கியம், தைரியம் யாவற்றையும் வேருடன் பறித்துக்கொண்டு சென்றாள். இன்று அவன் மனத்தில் வெறுப்புடன் கூடிய இந்த ஒரே பாவம் தான் தோன்றியது. வெகு நாட்களாக எதிர்பார்த்திருந்த ஒரு நல்ல தருணம் இன்று திடீரென்று அவன் எதிரில்வந்து நின்றது. ஆனால் கையை நீட்டி அதைப் பிடித்துக்கொள்ள அவனால் முடியவில்லை. ஹேமா அவனை மனமாறக் காதலிக்கிறாள்! என்ற விஷயத்தில் அவனுக்குப் பூரண நம்பிக்கையுண்டு, இன்று அதை அவள் வாயால் வெளிப்படையாகக் கேட்டுங்கூட அவனால் மனத்திலுள்ளதைச் சொல்ல

முடியவில்லை. சுலோசனா இறந்த பிறகு, 'இன்று சொல்லலாம்; நாளை சொல்லலாம்' என்று எண்ணிக் கொண்டு வந்தான். ஆனால் சொல்ல முடியவில்லை. அவளிடத்தில் ஒரு விஷசர்ப்பம் மறைந்திருப்பது போலவும், கையை நீட்டித் தொட்டதும் அது சீறிக் கொத்தி விடும் என்றுமே அவன் மனம் எண்ணியது. இதனால் அவனை மடக்கிப் போட்டிருந்த பயம் இன்று சமயம் வந்தபொழுதுகூட அவனைக் கையை நீட்டவிடவில்லை.

தினம் காலையில் ஸ்நானம் செய்ததும் ஹேமா அவனுக்கு நமஸ்காரம் செய்ய வருவது வழக்கம். மறுநாள் காலை அவள் நமஸ்காரம் செய்ய வந்ததும், குணேந்திரன் சங்கோசத்தை அறவே உதறித் தள்ளிவிட்டு, மனப்பூர்வமாக, "ஹேமா, நேற்று விதவா விவாகத்தைப் பற்றி ஏன் கேட்டாய்?" என்று வினவினான்.

"ஒரு பத்திரிகையில் படித்தேன்" என்றாள் ஹேமா.

"நீ அதைச் சரி என்று நினைக்கிறாயா?"

"ராம! ராம! அதுகூட ஒரு விவாகமா?"

"ஏன், அதனாலென்ன? ஹிந்துகளைத் தவிர உலகத்தில் எல்லா வகுப்பாரும் விதவா விவாகம் செய்து கொள்ளுகிறார்களே!" என்றான்.

"இருக்கலாம், அதனால் என்ன?" என்று சொல்லி விட்டு ஹேமா செல்லலானாள், குணேந்திரன் அவளைக் கூப்பிட்டு, 'ஹேமா இன்னொரு விஷயம்" என்றான்.

அவள் திரும்பி நின்று, "என்ன?" என்றாள்.

"உனக்கு வயசு என்ன?"

"பதினேழு!"

"இந்த வயசிலிருந்து வாழ்நாள் முழுவதும் சந்நியாசினியாகவே இருப்பாயா?"

ஹேமா மிருதுவான ஒரு புன்சிரிப்புடன், "இல்லா விட்டால் வேறென்ன செய்வது? என் அதிர்ஷ்டத்தைப் போல்தான் இருக்கிறது உன் புத்தியும்!" என்றாள்.

குணேந்திரன் சிறிது நேரம் ஹேமாவின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்து விட்டுப் பிறகு, "ஏன்? வேறு வழி யொன்றுமில்லையா?" என்று கேட்டான்.

"இல்லை, குணி அண்ணு, வேறு வழி இல்லை' என்று சொல்லிவிட்டு ஹேமா சென்று விட்டாள்.

நாளுக்குநாள் ஹேமாவின் சரீரத்தில் யௌவனத்தின் வடிவழகு எவ்வளவு பொலிவு கொள்ள ஆரம்பித்ததோ, அவளுடைய தர்ம கர்மங்களும் அந்த அளவுக்கு விரிவடைந்து கொண்டு வந்தன. குணேந்திரன் எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டு வந்தான். ஆனுல் வாய் திறந்து அவனுல் எதுவும் சொல்ல முடியவில்லை. ஹேமா விடம் ஏதோ ஒரு சக்தி இருந்தது. அதன் காரண மாகத்தான் எல்லோரும் உள்ளுக்குள் அவளிடம் பயந்தனர். அவள் தாயும் அவளிடம் பயந்தாள். குணேந்திரனும் பயப்பட்டான்.

இதற்குச் சில நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் குணேந்திரன் கச்சேரிக்குச் செல்லத் தயாராகிக் கொண்டு இருந்தான். இதற்குள் ஹேமா அங்கே

வந்து சேர்ந்தாள். அலமாரியைத்திறந்து 'செக்' புஸ்தகத்தை எடுத்து, குணேந்திரனின் கையில் கொடுத்து, "திரும்பிவரும்போது பாங்கியிலிருந்து ஐந்நூறு ரூபாய் பணம் வாங்கிக்கொண்டு வர வேண்டும்!" என்றாள்.

"சரி" என்று குணேந்திரன் 'செக்' புஸ்தகத்தை வாங்கிப் பையில் வைத்துக்கொண்டான்.

"இரு; வீட்டுச் செலவுக்குக்கூட ரூபாய் இல்லை. இன்னும் இருநூறு ரூபாய் வாங்கிக்கொண்டு வா!" என்றாள்.

குணேந்திரன் ஆச்சரியத்துடன், "ஆனால் இந்த ஐந்நூறு ரூபாய் எதற்காக?" என்று கேட்டான்.

"இந்த ரூபாயா? நாளைக்கு நான் காசிக்குப் போக வேண்டும்" என்றாள் ஹேமா.

குணேந்திரன் நாற்காலியில் அமர்ந்து, "காசிக்குப் போகிறாயா? இந்த விஷயத்தைப் பற்றி மற்றவர்களிடம் அபிப்பிராயம் கேட்க வேண்டியது அவசியமில்லை என்று நினைத்தாயா?" என்றான்.

ஹேமா சற்று வருத்தத்துடன், "உன் உத்தரவைப் பெறவேண்டும். பிறகு செல்வேன்" என்றாள்.

"நாளைக்குப் போவதென்று நிச்சயம் செய்து விட்டாய். உத்தரவு எப்பொழுது பெற்றுக் கொள்ளப் போகிறாய்? கூட யார் வருகிறார்கள்?" என்று கேட்டான் குணேந்திரன்.

"மாந்தாவும் வேலைக்காரனும் வருகிறார்கள். இன்று இரவு உன்னிடம் சொல்லலாம் என்று நினைத்திருந்தேன். குணி அண்ணா, நாளைக்குப் போகட்டுமா ?" என்றாள் ஹேமா.

"சரி, போகலாம்" என்று சொல்லி, குணேந்திரன் கச்சேரிக்குச் சென்றுவிட்டான்.

சாயங்காலம் நோட்டுகளை வாங்கி அலமாரியில் வைத்துவிட்டு, ஹேமா குணேந்திரனிடம் வந்து; "நாளைக்கு நான் போகமுடியாது" என்றாள்.

"ஏன் ?"

"இன்று மத்தியானம், சமையற்காரனுக்கு, அவன் தாய் அசௌக்கியமாக இருப்பதாகத் தந்தி வந்தது. மூன்று மாதத்துச் சம்பளம் கொடுத்து அவனுக்கு விடுமுறையளித்துவிட்டேன். அவன் போய்விட்டான்" என்றாள் ஹேமா.

"சமையல் யார் செய்வார்கள் ?" என்று கேட்டான் குணேந்திரன்.

"வேறு சமையற்காரன் கிடைக்கும்வரை நான் தான் சமையல் செய்யப்போகிறேன். குணி அண்ணா, நீ இனிமேல் கல்யாணம் செய்து கொண்டுவிடு."

"ஏன் ?"

"ஏனா? கல்யாணம் செய்துகொள்ளாவிட்டால் குடித்தனத்தை யார் கவனிப்பார்கள்? உன்னை யார் கவனிப்பார்கள் ?"

"நீ ?"

ஹேமா சிரித்துக்கொண்டே, "நான் வெகு காலம் இந்தக் குடும்பத்தைத் தலைமேல் வைத்துக்

கொண்டிருக்க முடியுமா? எனக்கு வேறு வேலை ஒன்றும் இல்லையா?" என்று கேட்டாள்.

"ஏன், என்னைப் பார்த்துப் போஷிப்பது ஒரு வேலை அல்லவா?" என்று கேட்டான் குணேந்திரன்.

ஹேமா சிரித்துக்கொண்டே, "உன்னோடு வாதாட முடியாது. இல்லை, இல்லை. அது அவசியமில்லை. உன்னுடைய சமூகத்தில் வயதான பெண்கள் கிடைப்பார்கள். பார்த்து ஒரு பெண்ணை மணம் செய்துகொள். நான் அவளிடம் குடும்பத்தை ஒப்பித்து விட்டுக் காசிக்குச் செல்கிறேன்" என்றாள்.

"சரிதான், நீயும் ஒரு கல்யாணம் செய்து கொள். நானும் செய்துகொள்ளுகிறேன்" என்றான் குணேந்திரன்.

அதுவரை ஹேமா சிரித்துக்கொண்டிருந்தாள். கண நேரத்தில் அவள் சிரிப்பு மறைந்துவிட்டது. அவள் கம்பீரமாக, "சிவசிவா! இதென்ன வேடிக்கை குணி அண்ணா? இனி இம்மாதிரி வார்த்தையை வாயால் கூடச் சொல்லாதே!" என்றாள்.

குணேந்திரன் மேற்கொண்டு ஒன்றும் சொல்லவில்லை. அவன் திக்பிரமை யடைந்து அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். ஹேமா எழுந்து சென்றாள்.

## 7

ஹேமா இரண்டு மாதம் காசியில் இருந்தாள், பிறகு குணேந்திரனுக்கு உடம்பு அசௌக்கியம் என்று தகவல் கேட்டு, கல்கத்தா வந்தாள். அவள் வந்திராவிடில் குணேந்திரனின் நோயும் அதிகரித்திருக்கும். அவள் வந்து செய்த சேவையாலும், சிகிச்சையாலும் குணேந்திரன் சீக்கிரம் குணமடைந்தான்.

அன்று வெளியே மழை தூறிக்கொண்டிருந்தது. குணேந்திரன் தன் கட்டிலில் உட்கார்ந்து கண்ணாடி ஜன்னல் வழியாக வெளியே பார்த்துக்கொண்டே, ஹேமாவைப்பற்றி யோசித்துக்கொண்டிருந்தான். இப்பொழுது அவன் அவளிடம் பல மாறுதல்களைக் கண்டான். முன்பெல்லாம் ஹேமா காலையில் குணேந்திரனை நமஸ்கரிக்க வருவது வழக்கம். ஆனால் இப்பொழுது வருவதில்லை. மாந்தாவைக் கூப்பிட்டு ஹேமாவை அழைத்து வரும்படி கட்டளையிட்டான். அவள் திரும்பி வந்து, "அம்மா ஜபம் செய்துகொண்டிருக்கிறாள்" என்று சொன்னாள்.

சுமார் இரண்டு மணி நேரத்திற்குப் பிறகு, ஹேமா குணேந்திரனின் அறைக்கு வந்து, "என்னைக் கூப்பிட்டாயா?" என்று கேட்டாள்.

"ஆமாம் சற்று உட்காரு" என்றான் குணேந்திரன்

"என் ஜபம் இன்னும் பூர்த்தியாகவில்லையே."

"இரண்டு மணி நேரமாகச் செய்கிறுயே இன்னும் உன் ஜபம் பூர்த்தியாகவில்லையா?"

"இரண்டுமணி நேரத்தில் என்ன ஆகும்? குறைந்தது இரண்டாயிரமாவது செய்யவேண்டு மென்று குரு சொல்லியிருக்கிறுர்."

"குரு சொல்லியிருக்கிறுரா? அது யார் அந்தக் குரு?"

"நான் இந்தத் தடவை காசி சென்றிருந்த பொழுது மந்திரம் உபதேசித்தவர். அந்தக் குரு காசியில் இருப்பவர். ஆஹா! அவரைக் கண்டாலே மீண்டும் இந்த உலக பந்தத்தில் வர மனம் வருவ தில்லை. இனி எப்பொழுது அவர் தரிசனம் கிடைக்குமோ? இதுதான் யோசிக்கிறேன். நாளைக் காவது நாளன்றைக்காவது காசிக்குப் போக லாமா என்று எண்ணுகிறேன்" என்ருள் ஹேமா.

குணேந்திரன் சிறிது நேரம் மௌனமாக இருந்து விட்டுப் பிறகு, "நாளைக்காவது நாளனன் றைக்காவது எப்படிப் போவாய்? நான் இன்னும் சரியாகச் சௌக்கிய மடையவில்லையே ஹேமா, என்னை யார் கவனிப்பார்கள்?" என்று கேட்டான்.

ஹேமா சற்று வருத்தத்துடன், "அதொன்று மில்லை. இரண்டு மூன்று நாட்களில் நன்ருக ஆகி விடுவாய்!" என்ருள்.

"அந்த இரண்டு மூன்று நாட்கள் வரையிலாவது இருப்பாயா, மாட்டாயா?"

"சரி, இருந்துவிட்டுப் போகிறேன். நீ எனக்கு மாதம் நூறு ரூபாய் செலவுக்கு அனுப்பிவிடு. அதற்குக் குறைந்தால் முடியாது."

"ரூபாயைப்பற்றி என்ன ஹேமா! நூறு என்கிற இடத்தில் இருநூறு வேண்டுமானலும் அனுப்புகிறேன். ஆனல் நீ உண்மையாகவே இனித் திரும்பிவரமாட்டாயா?" என்ருன் குணேந்திரன்.

"எதற்காக இனி வரவேண்டும்?"

"நான் இறந்த செய்தி கேட்டால் வருவாயா?"

ஹேமா துக்கமடைந்து, "குணி அண்ணு, ஏன் இந்தமாதிரி சொல்கிருய்?" என்ருள்.

"யாருக்கு எப்பொழுது முடிவு என்பதை எப்படிச் சொல்லமுடியும், ஹேமா! ஆகையால் இந்த மாதிரி சமயம் வருமுன்பே சொல்லி வைப்பது மேலல்லவா? என்னுடைய உயிலில் உனக்கு ரூபாய் கொடுக்கும்படி ஏற்பாடு செய்யப்படும். இந்த வீடும் உன்னுடையதாக ஆகும். நீ எப்பொழுதாவது இங்கே வந்தால் இந்த வீட்டில் இதே அறையில் படுத்துத்தூங்க வேண்டும். இவ்வளவுதான். இது தான் என் கோரிக்கை" என்ருன் குணேந்திரன்.

ஹேமா ஏதோ சொல்ல விரும்பினுள். ஆனல் அதை மனத்திற்குள் விழுங்கிக்கொண்டே, "குணி அண்ணு, நான் சொல்லுகிறேன். உனக்கு ஒரு பயமும் இல்லை. இப்பொழுது நீ கொஞ்சம் பலவீன மாக இருக்கிருய். ஆகையால்தான் இந்த மாதிரி எல்லாம் தோன்றுகிறது" என்ருள்.

"ஒருகால் அப்படியும் இருக்கலாம்" என்று சொல்லி குணேந்திரன் வெளியே மழை பெய்வதைப் பார்க்கலானுன்.

ஹேமா துன்பம் தேங்கிய முகத்துடன் வெளியே சென்ருள்.

சாயங்காலமாகிச்சிறிது நேரத்திற்கெல்லாம் கதவிடுக்கின் வழியாக, குணேந்திரன் அறையில் விளக்கில்லாமல் இருப்பதைக் கண்டு ஹேமா கோபத்துடன் உரக்க, "நந்தா, ஏன் இந்த அறையில் இன்னும் விளக்கு ஏற்றவில்லை?" என்று இரைந்தாள்.

குணேந்திரன் உள்ளே இருந்துகொண்டே, "நான்தான் வேண்டாமென்றேன்" என்றான்.

நந்தன் ஓடிவந்தான். அவனிடம் மெழுகு வர்த்தி கொளுத்திக்கொண்டு வரும்படி சொல்லி விட்டு, ஹேமா அந்த இருட்டறையில் பிரவேசித்து அனுமானத்தின்பேரில் குணேந்திரன் படுத்திருந்த கட்டிலில் ஒருபுறம் அமர்ந்தாள். நந்தன் மெழுகு வர்த்தியைக் கொளுத்தி வந்து மேஜைமேல் வைத் தான். ஹேமா குணேந்திரனின் கால்களில் கையை வைத்தாள். அவன் சட்டென்று காலை மடக்கிக் கொண்டான். ஹேமா வருத்தமடைந்து, "ஏன், கால்களைத் தொடவிடமாட்டாயா?" என்று கேட்டாள்.

"அதற்கு அவசியம் என்ன இருக்கிறது? உன்னுடைய குரு அதைத் தடுத்திருந்தாலும் இருப் பார்" என்றான் குணேந்திரன்.

இந்தத் தடவை அவள் காசியிலிருந்து வந்த பிறகு அவன் காலைத் தொடவில்லை. இதைக் குறித்துத்தான் அவன் இப்படிச் சொல்லுகிறான் என்பதை ஹேமா அறிந்துகொண்டாள். ஆனால் அவளால் பதிலொன்றும் சொல்ல முடியவில்லை. பேசாமல் உட்கார்ந்திருந்தாள். சற்றுப் பொறுத்து,

"குணி அண்ணா, உனக்கு என்மேல் கோபமா?" என்று கேட்டாள்.

"ஹேமா, நான் என்றைக்காவது உன்னிடம் கோபித்துக் கொண்டிருக்கிறேனா?" என்றான் குணேந்திரன்.

ஹேமா பச்சாத்தாபத்துடன், "ஒருபொழுதும் இல்லை. ஆனால் இன்று எதற்காக இந்த வார்த்தைகளை யெல்லாம் சொல்லிக்கொண்டிருக் கிறாய்?" என்றாள்.

"எந்த வார்த்தைகள்?"

"உயில் விஷயம்; இன்னும் என்ன என்னவோ! குணி அண்ணா, நான் சொல்கிறேன் நீ சௌக்கியமடைந்து விடுவாய்! பயப்படாதே" என்றாள் ஹேமா.

குணேந்திரன் சிறிது புன்னகையுடன் "நான் சௌக்கியமடைய மாட்டேன் என்பதற்காகப் பயப் படுவதாகவா நீ நினைத்தாய்?" என்றான்.

ஹேமா அழுகையுடன், "குணி அண்ணா, உன் கால்களைப் பிடித்துக் கொள்கிறேன்; நீ இந்த வார்த்தைகள் ஒன்றையுமே சொல்லாதே! நீ சௌக்கியம் அடையாவிட்டால் நான் எப்படி உயிர் வாழ்வேன்?" என்றாள்.

"நீ சென்றுவிட்டபின் நான் எப்படி உயிர் வாழ்வேன்? ஆகையால் நான் உன்னைப் போக விடாமல் பிடித்து வைத்திருக்கட்டுமா?" என்றான் குணேந்திரன்.

ஹேமா சிறிது நேரம் மௌனமாக இருந்து விட்டு, "என்னைத் தடுத்து வைப்பதால் உனக்கு என்ன லாபம்?" என்று கேட்டாள்.

"லாபமா ?" மேற்கொண்டு குணேந்திரனல் ஒன்றும் சொல்ல முடியவில்லே. அவன் மௌன மானுன். வெளியே இருந்து வீசிய காற்றில் பெரிய பெரிய மழைத்துளிகள் ஜன்னலில் மோதிகொண் டிருந்தன. திடீரென்று வேகமாககாற்று அடித்தது. அதனுல் ஜன்னல் திறந்து மெழுகுவர்த்தி அணேவது போல் ஆகிவிட்டது, கீழே இருந்த வேலேக்காரர் களின் குரல்கள் விளக்கமின்றிக் கேட்டுக் கொண் டிருந்தன. ஆயினும் இருவரும் மௌனமாக இருந்தனர். குணேந்திரன் குழந்தையிலிருந்தே தன்னம்பிக்கையும் உறுதியும் உள்ளவன். அவன் தன் தைரியத்தின் அணேயைப் பலமாகத் தான் கட்டியிருந்தான். ஆயினும் சுலோசனுவின் ஆசீர்வாதம் அன்றைத் தினத்திலிருந்தே ஓர் எலிபோல் அதில் புகுந்து அதில் வளேயறுத்து ஓட்டைகளே உண்டுபண்ணிவிட்டது. அதன் வழி யாக அவன் இதயநதியின் தண்ணீர் தாரை தாரை யாகப் பெருகிக்கொண்டிருந்தது. எந்தச் சமயம் முழுதுமே உடைப்பெடுத்துக் கொண்டு சென்று விடுமோ தெரியாது. வெளியே வெறிகொண்டு உருமும் இயற்கையைப் பார்த்துக் கொண்டே ஒருமுறை முதலிலிருந்து கடைசிவரை எல்லா விஷயங்களேயும் சிந்தித்து, மனக்கண்முன் பார்க்க விரும்பினுன். ஆனல் அவனுடைய மெலிந்த உடலும், களேத்திருந்த மூளேயும் அவனே நிம்மதி யாகச் சிந்தனே செய்ய விடவில்லே.

ஹேமா சட்டென்று, 'குணி அண்ணு, ஏன் பேசாமல் இருக்கிருய்? என்ன யோசிக்கிருய் ?" என்று கேட்டாள்.

"ஒன்றுமில்லை. ஒன்றுமில்லை. அது உன்னிடம் சொல்லக் கூடிய விஷயமல்ல. நீ அதை அறிய முடியாது. ஆனல் என்றைக்காவது ஒரு நாள் உன் புத்தி திரும்பினுல், நானும் பிழைத்திருந்தால்........

ஹேமா சற்றுத் திரும்பி உட்கார்ந்து, நான் எல்லாவற்றையும் அறிவேன். அட கஷ்ட காலமே! வேலியே பயிரை மேய ஆரம்பித்துவிட்டது. கடைசியில் என்னைத் துர்க்கதிக்கு இழுத்துச் செல்லவா விரும்புகிருய் ?" என்ருள்.

குணேந்திரன் ஒரு பெரிய தலையணையில் சாய்ந்து கொண்டு உட்கார்ந்தான். அவன் கண்கள் சிவந்தன. சரியாக உட்கார்ந்து, "சீச்சீ! ஹேமா! சற்று யோசித்துப் பேசு. நீ என்ன சொல்லுகிருய் ?" என்ருன்,

ஹேமா மின்னலைப்போல் சட்டென்று எழுந்து நின்று, "யோசித்துத்தான் சொல்லுகிறேன். நீ சுற்றி வளைத்து எதைச் சொல்ல விரும்புகிருயோ அதை நான் உன் எதிரில் வெளிப்படையாகச் சொல்லுகிறேன். நீ என்னை வீணுக்க விரும்புகிருய். குணி அண்ணு! விதவைக்கு விவாகம் எதற்கு? தர்மத்தை அறிந்தும் அதர்மத்தின் கால்களில் சரணடைய நான் அவ்வளவு அறியாதவளல்ல. நான் உன் ரூபாயை விரும்பவில்லை, உன்னுடைய ஆதரவையும் விரும்பவில்லை. உன்னிடம் நான் எதையும் விரும்பவில்லை. நான் என் புக்ககம் சென்று அவர்கள் வீடு கூட்டி என் வயிறு வளர்க்கிறேன். அதுதான் எனக்குச் சிறப்பு. உன்னுடைய இந்தச் சொத்து எனக்கு அவசியமில்லை. எனக்கு அம்மாதிரி கெட்ட புத்தி உண்டாகாமல்

இருக்கட்டும். ஏன்?, அன்று தினம்உன் புத்தி எங்கே போயிற்று? அன்று நீ ஏன் இம்மாதிரி சொல்ல முடியவில்லை?' என்றாள்.

குணேந்திரன் முன்போல அசைவற்று உட்கார்ந்து, "ஹேமா, நான் தவறு செய்துவிட்டேன். என்னை மன்னித்துவிடு. நான் நோயாளி என் பதையும் ஒரு முறை யோசி!" என்றான்.

"யோசிக்கிறேன். மன்னிப்பு இன்று இல்லாவிட்டால் இரண்டு நாள் பொறுத்துச் செய்தே விடுவேன். ஆனால் இனி உன்னுடன் இருக்க முடியாது. கர்வத்துடன் எங்கிருந்து திரும்பி வந்தேனே அங்கேயே நாளை செல்கிறேன். என்ன செய்தாலும் அங்கேயே இருக்கிறேன். அதுவே என் காசி; அதுவே என் வைகுண்டம் என்று எண்ணிக் கொள்கிறேன். குணி அண்ணா, நீயும் என்னை மன்னித்துவிடு. நான் செல்கிறேன்" என்றாள் ஹேமா.

ஹேமா சென்றுவிட்டாள். குணேந்திரன் உடல் மின்னலால் தீப்பற்றிய மரம் போல் ஆயிற்று. எரியும் சிதையிலிருந்து எழுந்த கவந்தம் நிற்க முடியாமல் சாய்ந்ததுபோல் ஓய்ந்து உட்கார்ந்து விட்டான்.

# 8

மீண்டும் துர்க்கா பூஜை வந்தது. ஹேமா அதி காலையிலேயே எழுந்து ஜன்னலருகே நின்றுகொண்டு கிழக்கே உதிக்கும் சொர்ண மய மான சூரியனைப் பார்த்துக் கொண்டிருந்தாள். தெருவில் எங்கோ மணியடிக்கும் சப்தம் கேட்டது. அதனுடைய இன்னிசை சரத் காலத்தின் பூரண கருணையுடன் அவளுடைய உள்ளத்தில் சஞ்சாரம் செய்யத் தொடங்கியது. அவளை அறியாமல் அவள் கண்கள் கண்ணீரைச் சொரிந்தன.

வெகு நாட்களாகின்றன. குணேந்திரனிட மிருந்து அவளுக்கு யாதொரு தகவலும் கிடைக்க வில்லை. அவள் சிந்திக்கலானாள். என் குணி அண்ணு இப்பொழுது எப்படி இருப்பான், எங்கே இருப் பான்? அவள் கல்கத்தாவிலிருந்து வரும்போது குணேந்திரன் அழுதுகொண்டே, "ஹேமா, கோபித்துக் கொள்ளாதே! இன்னும் இரண்டு தினங்களாவது இருந்துவிட்டுப் போ" என்று வேண்டினான். அன்பின் கண்ணீரின் மதிப்பை அவள் அன்று அறியவில்லை. நோயினல் மிக்க களைத்திருந்துங்கூட குணேந்திரன் அன்றுவெளியே தெரு வரைக்கும் வந்து, "ஹேமா, உன் மனம் சரியான நிலைமையில் இல்லை. எந்தக் காரணத்தி னலோ அது குழம்பிக்கிடக்கிறது. ஆகையால் நான் சொல்லுவதைக்கேள் இன்னும் ஒரு நாளாவது இங்கு இருந்துவிட்டுப் போ" என்று சொன்னான்.

ஆனல் ஹேமா ஒன்றையும் கேட்கவில்லை. வண்டியில் ஏறி அமர்ந்தாள், குணேந்திரன் வண்டியருகில் சென்று, "ஹேமா. இன்று நீ செய்யும் இந்தக் காரியம் உன் மனத்தைப் பிறகு வருந்தச் செய்யும். நான் எனக்காகச் சொல்ல வில்லை. உனக்காகத்தான் சொல்லுகிறேன்; இன்று மாத்திரம் இருந்துவிட்டுப்போ. வண்டியை விட்டு இறங்கு" என்று சொன்ஞன்.

ஹேமா பதிலுக்கு வண்டிக் காரனிடம், "வண்டியை ஓட்டு" என்று உத்தரவிட்டாள். இவைகளை எல்லாம் எண்ணி எண்ணி, ஹேமா திரும்பிவந்து தன் படுக்கையில் படுத்து வெகு நேரம் வரை அழுது அழுது களைத்துத் தூங்கி விட்டாள். அவளுடைய இந்தத் துக்கத்திற்கு மற்ருெரு காரணமும் இருந்தது. தீர்த்த யாத்திரை செய்வதற்காக வேலைக்காரியை அனுப்பி, குமாஸ்தாவிடம் ஐம்பது ரூபாய் வாங்கிக்கொண்டு வரும்படிச் சொன்னுள். "சின்னபாபுவின் உத்தர வில்லாமல் ரூபாய் கொடுக்க முடியாது" என்று குமாஸ்தா வேலைக்காரியைத் திருப்பி அனுப்பி விட்டான், ஹேமா தன் மைத்துனனிடம் பேசுவது இல்லை. ஆகவே அவள் கதவின் மறைவில் நின்றுகொண்டு, "லாலாஜி, ஐம்பது ரூபாய்வரை கூட நான் குமாஸ்தாவிடமே கேட்டு வாங்கிக் கொள்ள முடியாதா?" என்று கேட்டாள்.

"இல்லை, உங்களுக்குச் சாப்பாடும், உடையுந் தான் கிடைக்கும். வேறு பாத்தியம் ஒன்றும் உங்களுக்குக் கிடையாது. ரூபாய் கொடுப்ப தென்பது முடியாது" என்ருன்.

"எது பாத்தியம், எது உரிமை, எது இல்லை என்பது எனக்குத்தெரியும் லாலாஜி. உன்னிடம் பணம் காசுக்காக எந்தவித வழக்கிடவும் எனக்கு விருப்பமில்லை. என்னை அவ்வளவு கேவலமாக நினைத்துவிடாதே. உனக்குக் கொடுக்க இஷ்டமானல் கொடு, இல்லாவிட்டால் நான் சொல்லி வைக்கிறேன்: எனக்கு ரூபாய் தேவையிருந்தால் உன்னிடம் விரோதித்துக்கொண்டு, உன் வீட்டின் ஒவ்வொரு செங்கல்லையும் பெயர்த்துக் கங்கையில் எறிய என்னல் முடியும்" என்ருள்.

இதற்குச் சிறிது நேரத்திற்குப் பிறகு ரூபாய் வந்து சேர்ந்தது. ஆனல் ஹேமா கோபத்துடன் அதை வாங்கி முற்றத்தில் வீசி எறிந்துவிட்டுத் தன் அறையில் வந்துபடுத்துக்கொண்டாள். அன்று முழுவதும் அவள் ஒன்றும் சாப்பிடவில்லை. எழுந்திருக்கவும் இல்லை. தனக்குள் எதையோ நினைத்து நினைத்து அழலானுள்.

மறுநாள் காலையில் ஹேமா எழுந்திருக்கும் போது மணி ஏழாகிவிட்டது. ஸ்நானம் செய்து ஜபம் செய்ய அமர்ந்தாள்; இற்குள் வேலைக்காரி அங்கே வந்து "அம்மா, உன் அண்ணு வீட்டிலிருந்து நாலைந்து பேர் சீர்கொண்டு வந்திருக்கிருர்கள்" என்ருள். இந்த வார்த்தை முடியுமுன்பே, மாந்தா ஓடிவந்து நமஸ்காரம் செய்தாள்.

மாந்தாவின் முகத்தைக் கண்டதும், ஹேமா தன் துக்கத்தை எல்லாம் மறந்துவிட்டாள். அவளைத் தன் மார்போடு அணைத்துக்கொண்டு குழந்தைபோல் அழலானுள். அன்று மாந்தாவைக் கட்டிக்கொண்டு, கிட்டத்தட்ட ஒரு வருஷமாக

அடைந்துகிடந்த தன் அழுகையை மடைதிறந்தாற் போல் பெருக்கலானாள். மாந்தாவைத் தன் அறைக்கு அழைத்துச் சென்று, "குணி அண்ணா எனக்கு ஏதாவது கடிதம் கொடுத்திருக்கிறானா?" என்று கேட்டாள்.

"கடிதம் ஒன்றும் கொடுக்கவில்லை" என்றாள் மாந்தா.

ஹேமாவுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. "கொடுக்கவில்லையா?" என்று மீண்டும் கேட்டாள்.

"இல்லையம்மா, கொடுக்கவில்லை, அவர் எழுந் திருக்கவோ உட்காரவோ முடியாது, எப்படி கடிதம் எழுத முடியும்?" என்றாள் மாந்தா.

ஹேமாவின் முகம் வெளிறடைந்தது. அவள் தன்னை மிகக் கஷ்டத்துடன் சமாளித்துக்கொண்டு "எழுந்து உட்கார முடியாமல் அவனுக்கு என்ன ஆயிற்று?" என்று கேட்டாள்.

"உனக்கு ஒன்றுமே தெரியாதா?"

"தெரியாதே, நீ சொல்."

"நான் என்ன அம்மா சொல்லப் போகி றேன்?" என்று சொல்லி மாந்தா அழலானாள்.

ஹேமா வரண்ட குரலுடன், "பிறகு அழலாம், முதலில் விஷயத்தைச் சொல்லு" என்றாள்.

மாந்தா அழுதுகொண்டே, "என்ன அம்மா சொல்வேன்? நீ சென்ற மறுநாளே மீண்டும் ஜுரம் வர ஆரம்பித்தது. குணமாயிற்று, மீண்டும் வரலாயிற்று. மீண்டும்நின்றது. இந்தமாதிரி மாறி மாறி வருகிறது. திரும்பிப் போய், பார்ப்பேனா என்ற நம்பிக்கைக்கூட எனக்கு இல்லை" என்றாள்.

"வேறு என்ன விஷயம்?" என்றாள் ஹேமா.

"விஷயம் ஒன்றும் கேட்காதே அம்மா. உடம்பு சரியில்லை என்று கேள்விப்பட்டதுமே பர்த்வானிலிருந்தோ, இன்னும் எங்கிருந்தோ, யாரோ பெரிய அம்மாவாம் அவள் வந்தாள். பிறகு பெரியப்பா, பெண், பிள்ளை, நாட்டுப்பெண், மாப்பிள்ளை, வீடு கொள்ளாமல் வந்திருக்கிறார்கள். வீட்டில் இடம் கிடையாது" என்றாள்.

"நான் எல்லோருக்கும் விடை கொடுத்தனுப்புகிறேன், மேலே சொல்லு" என்றாள் ஹேமா.

"எல்லாரும் உண்ணுகிறார்கள், உடுக்கிறார்கள் ஆனால் பாபு மேலே படுத்துக் கொண்டிருக்கிறார். டாக்டரோ, வைத்தியனோ, மருந்தோ, பத்தியமோ ஒன்றும் கிடையாது. இடம் மாற்றி நல்ல காற்று வாங்கினால் நல்லதென்று சொல்லுகிறார்கள். யார் அழைத்துக்கொண்டு போவது?" என்றாள்.

"நீங்களெல்லோரும் என்ன செய்கிறீர்கள்? நந்தன் ஏன் அழைத்துக்கொண்டு, போகக் கூடாது?" என்று கேட்டாள் ஹேமா.

மாந்தா தலையில் அடித்துக்கொண்டு, "அவன் ஒருவன்தான் பாபுவின் பழைய வேலைக்காரன். பெரியம்மாவின் மகன் அபயன் அவனையும் அடித்து விரட்டிவிட்டான். பையன் குடிக்கிறான். ஒவ்வொரு நாள் அவன் குடி வெறியில் அடிக்கும் கூத்து அறையை விட்டு வெளியே வரக்கூடப் பயமாக இருக்கிறது. பாபுகூட அவனிடம் பயப்படுகிறார்" என்றாள்.

ஹேமா சற்று மௌனமாக இருந்துவிட்டு, "மாந்தா ஒரு ஒரே விஷயம், உண்மையாக எனக்குச்சொல்; குணி அண்ணா இனி பிழைக்க மாட்டானோ?" என்று கேட்டாள்.

"பிழைக்காமலென்ன அம்மா? சென்று பார்த்து முயற்சி செய்; கட்டாயம் சௌக்கியமாகி விடுவார். இப்படியே இருந்தால் இன்னும் எத்தனை நாள் பிழைத்திருப்பார்?" என்றாள் மாந்தா.

ஹேமா ஒரு நிமிஷம் கண்களை மூடிக் கொண்டே உட்கார்ந்திருந்தாள். பிறகு எழுந்து நின்று" மாந்தா திரும்பிப்போக உன்னிடம் ரூபாய் இருக்கிறதா"? என்று கேட்டாள்.

"இருக்கிறது, இல்லாமலென்ன? உனக்குத் தெரியாதா, ஒரு ரூபாய் செலவுள்ள இடத்தில் பத்து ரூபாய் கொடுத்தனுப்புவாரே, நம்ம பாபு. ரூபாய் என்னிடமே இருக்கிறது" என்று சொல்லித் தலைப்பை அவிழ்த்து நோட்டைக் காட்டினாள்.

"எப்பொழுது போகப் போகிறாய், நாளைக்கா?" என்று கேட்டாள் ஹேமா.

"ஆமாம் அம்மா, நாளைக்கே போகவேண்டும். நான் ஒருத்திதான் பழைய வேலைக்காரியாக அங்கே இருந்தேன். மற்றவர்கள் எல்லோரும் புதியவர்கள். யார் கவனிப்பார்கள்? பெரியம்மா எப்படியோ அப்படித்தான், அவள் பிள்ளை, பெண், நாட்டுப் பெண் எல்லாம். பிரம்மா எப்படித்தான் எல் லோரையும் ஒரே மண்ணால் உண்டாக்கினானோ! நான் இந்த வயதில் எப்படியோ என்னால் ஆனதைச் செய்துவருகிறேன். அபயன் என்னைக்கூட ஒரு நாள் அடிக்க ஓடிவந்தான். 'பாபுஜி இறந்தால் ஆபத்து ஒழிந்தது' என்கிறான்" என்றாள் மாந்தா.

ஹேமாவின் கண்களில் கோபமும் கேலியும் ஜ்வலித்தன. "முதலில் போய்ச் சேருகிறேன்

ஆகட்டும், இன்று ஸ்டீமர் எப்பொழுது புறப்படு கிறது?" என்று கேட்டாள்.

"இன்னும் ஒரு மணி நேரத்தில் புறப்படு கிறது, வரும்போது நான் கேட்டுக்கொண்டுதான் வந்தேன்."

"ஆனல் வா: அதிலேயே போய்விடுவோம். போய் ஒரு வண்டி கொண்டுவா."

"இன்றைக்கே நீ புறப்படப் போகிருயா அம்மா? இன்று நாள் நன்ருக இல்லையே?"

"நல்ல நாள்தான். தாமதம் செய்யாதே, வண்டியைக்கொண்டுவா" என்ருள் ஹேமா. மாந்தா எழுந்துசென்ருள்.

# 9

அன்று மாலை அபயனுக்குத் தட்டில் பரிமாறிவிட்டு அவன் தாய் அருகில் உட்கார்ந்து கொண்டு இன்னும் இரண்டு பூரி சாப்பிடு என்று வற்புறுத்திக் கொண்டிருந்தாள். பக்கத்தில்தான் மேல்மாடிக்குச் செல்லும் படி இருந்தது. முன்பின் பார்க்காத ஹேமாவைக்கண்டதும் அவள் ஆச்சரியத்துடன், "நீ யார் அம்மா?" என்று கேட்டாள்.

"நான் ஒரு பரதேசி" என்று சொல்லி விட்டு ஹேமா மேலே சென்றாள். அபயன் அவளுடைய அபூர்வமான எழிலைக்கண்டு விரைத்துப் பார்த்துக் கொண்டிருந்தான்.

ஹேமா குணேந்திரனின் அறைக்குச் சென்று பார்த்தாள். அவன் சுவரின் பக்கம் முகத்தைத் திருப்பிக்கொண்டு படுத்திருந்தான். விழித்துக் கொண்டிருக்கிறானா, தூங்குகிறானா என்பது தெரியவில்லை. தலைமாட்டருகில் சாவிக்கொத்து கிடந்தது. ஹேமா முதலில் அதை எடுத்துத் தன் தலைப்பில் முடிந்துகொண்டாள். மேஜைமேல் இரண்டு மூன்று காலி மருந்து சீசாக்கள் கிடந்தன. எடுத்துப் பார்த்தாள். அதன் மேல்ஒட்டியிருந்தலேபிளில்பதினைந்து நாட்களுக்கு முந்தின தேதி இருந்தது. எல்லா விஷயமும் அவளுக்கு நன்றாக விளங்கி விட்டது. இதன் பின் அவள் இரும்புப் பெட்டியைத் திறந்து 'செக்' புஸ்தகத்தை எடுத்து அதில் செலவழிந்திருந்த

ரூபாய்க்கு கையெழுத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும்போது, பெரிய அம்மா வந்தாள். வந்து பார்த்ததும் திடுக்கிட்டுப்போனுள். "நீ யார்? ஏன் இரும்புப் பெட்டியைத்திறந்தாய்?" என்று உரக்கக்கத்தினுள்.

"ஏன் இரைகிருய்? அவன் தூக்கம் கலேந்து விடும்" என்ருள் ஹேமா.

பெரியம்மா இன்னும் உரக்க, "ஹா, என்ன? ஏன் கத்துகிறேனு?" என்று கூவினுள்.

குணேந்திரன் விழித்துக்கொண்டு புரண்டு படுத்தான்.

"நான் திறக்காவிட்டால் பின்னே யார் திறப்பது; நீயா?" என்று கேட்டாள் ஹேமா.

குணேந்திரன் பார்த்துக் கொண்டிருந்தான். இந்த இருவரில் யாரும் அந்தப் பக்கம் கவனம் செலுத்தவில்லே. பெரியம்மாள் கோபமடைந்தாள். அப்பொழுது குணேந்திரன், "ஹேமா, நீ எப்பொழுது வந்தாய்?" என்று கேட்டான்.

"இப்பொழுதுதான் வந்தேன். உன் பெட்டியைத் திறந்ததற்காக அன்னியர் வந்து இந்த அறையில் கூச்சல் போடவேண்டாமென்று அவர்களுக்குச் சொல். இவைகள் எல்லாம் என்னுடையவை. இந்த விஷயத்தை அவர்களுக்கு நன்ருகச் சொல்லி அவர்களே இங்கிருந்து போகச் சொல்" என்ருள் ஹேமா.

குணேந்திரன் எல்லாவற்றையும் அறிந்து கொண்டான். அவன் சிரித்துக்கொண்டே, "முன்பு நான் சொன்ன அதே உறவால் இவ்வளவு நாட்களுக்குப் பின் இரும்புப் பெட்டியைத் திறந்தாயென்று தெரிகிறது" என்ருன்.

6

ஹேமா செக் புஸ்தகத்தை எண்ணிக் கொண்டே, "ஆமாம்" என்றாள்.

"குணி, இது யார்?" என்றாள் பெரியம்மா.

"என் தங்கை!"

பெரியம்மா கண்களை உருட்டி, குணேந்திரன் முகத்தை ஒரு முறை பார்த்துவிட்டுக் கீழே குனிந்து கொண்டாள்.

"தங்கையா? இதுவரை நான் கேள்விப் படக்கூட இல்லையே; எப்படித் தங்கை?" என்று கேட்டாள் பெரியம்மா.

குணேந்திரன் இந்தக் கேள்விக்குச் சுருக்கமாக, "கோபித்துக்கொண்டு சென்றிருந்தாள். பெரியம்மா இவை யெல்லாம் அவளுடையவை தான்" என்றான்.

பெரியம்மாவுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. அவளுக்கு இது விளங்கவுமில்லை. பேசாமல் கீழே சென்றாள். அவள் சென்றபிறகு குணேந்திரன் ஹேமாவின் பக்கம் சரியாகப் பார்க்காமல்; "சாகும் பொழுது திடீரென்று எப்படி உன் மனத்தில் இது தோன்றியது?" என்று கேட்டான். இதைச் சொன்ன பிறகு அவள் முகத்தைப் பார்த்துப் பயந்துவிட்டான். ஹேமாவின் முகம் வெளுத்து விட்டது. கணத்திற்குள் கோபம்கொண்ட ஒரு தபசியின் சாபத்தாலான கற்சிலைபோலானாள்.

குணேந்திரன் பயந்துகொண்டே, அவளை "ஹேமா!" என்று அழைத்தான்.

ஹேமா பதில் சொல்லவில்லை. அசையவும் இல்லை. பேசாமல் திரையைப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். குணேந்திரன் மிகுந்த வருத்தத்துடன், "ஹேமா, வா; நான் சொல்வதைக் கேள்" என்று அழைத்தான்.

ஹேமா அதற்குப் பதிலாத ஒரு பெருமூச்சு விட்டாள். பிறகு முன்போல் பேசாமல் அசைவற்று உட்கார்ந்திருந்தாள். குணேந்திரன் மெள்ளத் தட்டுத் தடுமாறி, கட்டிலில் எழுந்து உட்கார்ந்தான். பிறகு கட்டிலிலிருந்து இறங்கி மிகுந்தசிரமத்துடன் மெள்ள மெள்ள ஹேமாவின் எதிரில் வந்து நின்றான். அவன் எதிரில் வந்ததுமே, ஹேமா சட்டென்று அவன் காலடியில் விழுந்து அவன் இரு பாதங்களிலும் முகத்தைப் புதைத்து அழுதுகொண்டே, "நான் ஒரு குற்றமும் செய்யாமலிருக்கும்போதே எல்லோரும் எனக்குத் தண்டனையளிக்கிறார்கள். நீயும் இவ்வாறு அளிக்கப் போகிறாயா?" என்றாள்.

குணேந்திரன் பேசாமல் இருந்தான். ஆவணி மாதத்துக் கருமேகம்போல் அவள் கேசம் அவன் பாதங்களை மறைத்துக் கொண்டிருந்தது. அதைப் பார்த்துக்கொண்டே சிறிது நேரம் மௌனமாக நின்றான் குணேந்திரன். பிறகு மெள்ள உட்கார்ந்து ஹேமாவின் சிரத்தில் தன் வலது கையை வைத்துச் சாந்தத்துடன், "ஹேமா நான் உனக்கு என்ன தண்டனை யளிப்பேன்? நீ என்னைக் காதலித்தாய். ஆகையால் நான் எனக்குக்கூடத் தண்டனை அளித்துக்கொள்ள முடியாது. இது தண்டனை அல்ல ஹேமா. நான்கு வருஷங்களில் அனுபவித்த கடுமையான துக்கத்திற்குப் பிறகு இறக்கும்போது கிடைத்தசாந்தி. கடைசி சமயத்தில் அந்தக் கிடைத்தற்கரிய வஸ்துவை உனக்கு அளித்துச் செல்கிறேன். வா; நாம் காசிக்குச் செல்லலாம்!" என்றான்.

ஹேமா முகத்தைப்புதைத்து அழுதுகொண்டே, "வா, ஆனால் இதுதான் உன் கடைசி ஆக்ஞையா? இதை நான் எப்படி அண்ணா சகிப்பேன்?" என்றாள்.

"நிச்சயம் சகித்துக் கொள்வாய்; ஹேமா, காதலின் மகிமையை விளக்க, பிரிவு, உன்போன்ற ஒப்பற்ற புகழ்ச்செல்வியின் வாசலில் வந்து கையேந்தி நிற்கிறது. அன்பின் உயிர் அந்தக் கிலமான குடிசையில் புகும்பொழுது அவமானத்தாலோ அலட்சியத்தினாலோ செல்லவில்லை. திருப்தியற்ற உள்ளத்தின் உணர்ச்சிகளே மகத்தான காதலின் உயிர். இதன் மூலம்தான் அது அமரத்வமெய்தி யுகயுகாந்தரங்களாக எத்தனையோ காவியங்கள், எத்தனையோ கதைகள், விலைமதிக்க முடியாத எவ்வளவோ கண்ணீர்கள், இவைகளைச் சேர்த்து வைத்திருக்கிறது. எப்பொழுது இந்த விஷயங்களையெல்லாம் தெளிவாக நீ அறிவாயோ, அப்பொழுது நீ இதைச் சகிக்க முடியும்; சகிப்பாய். ராதையின் வருஷக்கணக்கான விரகதாப[illegible] வைஷ்ணவர்களுக்கு உயிர். ஏன்? அவள் காத[illegible] பெறமுடியாமல் தவித்த அந்த உள்ளத் துடிப்பில் பூர்ணமான மாதுரியம் இருந்தது. இவைகளை எல்லாம் நீ அறியும்போது எல்லாவற்றையும் நீ சகித்துக் கொள்ள முடியும். ஹேமா! எழுந்திரு; வா; இன்றே நாம் காசிக்குச் செல்வோம். [illegible]க்கியிருக்கும் நாட்களில் நீ செய்யும் கடைசி சேவை உன்னுடைய பகவானின் கருணையால் பெருகி இந்த வாழ்நாள் முழுவதும் உன்னை நல்ல மார்க்கத்தில் சாந்தியுடன் வைக்கட்டும்" என்றான் குணேந்திரன்.

இருவரும் அன்றே காசிக்குச் சென்றார்கள்.